# கஷ்ட நிவாரண ஆபதுத்தாரண
# ஸ்ரீ மஹா காலபைரவர்
# ஆராதனையும் உபாஸனையும்



எஸ்.எஸ்.ராகவாச்சார்யர்

நர்மதா வெளியீடு

# உறவுகள் மேம்பட...

குடும்பத்திலும் சரி, அலுவலகத்திலும் சரி, மனித உறவுகளில் விரிசல்கள் ஏற்படாமல் இருக்கவும், ஏற்பட்ட விரிசல்கள் மேலும் பெரிதாகாமலும் இருக்க:

* நானே பெரியவன். நானே சிறந்தவன் என்ற அகந்தையை ( Ego ) விடுங்கள்.
* அர்த்தமில்லாமலும் பின்விளைவு அறியாமலும் பேசிக் கொண்டேயிருப்பதை விடுங்கள். ( Loose Talk )
* எந்த விஷயத்தையும் பிரச்சனையையும் நாசுக்காக கையாளுங்கள். ( Diplomacy ) விட்டுக் கொடுங்கள். ( Compromise )
* சில நேரங்களில் சில சங்கடங்களைச் சகித்துத்தான் ஆக வேண்டும் என்பதை உணருங்கள். ( Tolerance )
* எல்லோரிடத்திலும் எல்லா விஷயங்களையும், அவர்களுக்கு சம்பந்தம் உண்டோ, இல்லையோ சொல்லிக் கொண்டிருக்காதீர்கள்.
* உங்கள் கருத்துக்களில் உடும்புப் பிடியாய் இல்லாமல், கொஞ்சம் தளர்த்திக் கொள்ளுங்கள். ( Flexibility )
* மற்றவர்களுக்குரிய மரியாதையை காட்டவும், இனிய, இதமான சொற்களைப் பயன்படுத்தவும் தவறாதீர்கள். ( Courtesy )
* புன்முறுவல் காட்டவும், சிற்சில அன்புச் சொற்களை சொல்லவும்கூட நேரமில்லாதது போல் நடந்து கொள்ளாதீர்கள்.
* பிரச்சனைகள் ஏற்படும் போது அடுத்தவர் முதலில் இறங்கி வர வேண்டும் என்று காத்திருக்காமல் நீங்களே பேச்சைத் துவக்க முன் வாருங்கள்.

இந்த இனிய,
என்றும் பயன் தரும்
நூலை பரிசாக
வழங்குவதில்
பெரு மகிழ்வு கொள்ளும்

தங்கள்
அன்புள்ள ,



# கஷ்ட நிவாரண ஆபதுத்தாரண
# ஸ்ரீ மஹா கால பைரவர்
# ஆராதனையும் உபாஸனையும்

ஸாகித்ய சிரோமணி –
ஸாகித்ய விசாரத, தமிழ் வித்வான்
**பண்டித. எஸ்.எஸ். ராகவாச்சார்யார்**
'ஸ்ரீ தேவதா உச்சாடன மந்த்ர ராஜம்' நூலாசிரியர்




**நர்மதா பதிப்பகம்**
நல்ல நூல் வெளியீட்டாளர்கள்
10, நானா தெரு, (தி.நகர் தலைமை
அஞ்சலகத்தை ஒட்டிய தெரு), பாண்டிபஜார்,
தி. நகர், சென்னை – 600 017. தொலைபேசி : 24334397

## வாசகர்களுக்கு

நல்ல நூல்களுக்காகத் தரப்படும் தொகை செலவல்ல, மூலதனம்! நமது சிறப்பான எதிர்கால வாழ்வுக்காகத் தரப்படும் Investment! ஐம்பது ரூபாய் புத்தகத்தில் ஆயுட்கால வாழ்க்கைக்கான யோசனைகள் நிறைந் திருக்கும்.

☐ பொழுதுபோக்கு, கேளிக்கைகளுக்காகச் செலவிடப்படும் தொகையில் சிறு பகுதியையாவது பயன் தரும் புத்தகங் களுக்காகச் செலவிடுங்கள். மிகுந்த நன்மை பெறுவீர்கள்!

☐ எங்களது இலவச விலைப்பட்டியலைப் பெற 50 காசு அஞ்சலட்டை மட்டும் எழுதுங்கள். உடன் எங்கள் செலவிலேயே அனுப்பி வைக்கிறோம்.

☐ தமிழகத்தின் எல்லா பிரபல புத்தகக் கடைகளிலும் நர்மதா நூல்கள் கிடைக்கின்றன. அவர்களிடமிருந்து (தபால் செலவின்றி) பெறலாம். தபாலில் அனுப்புவதற்கான கட்டணம் அதிகமாக உள்ள நிலையில் தங்கள் ஊர்ப் புத்தகக் கடையிலேயே பெறலாம். அவர்களையும் நல்ல நூல்கள் விற்க ஊக்குவிக்கலாம்!

எங்களது இமெயில் முகவரி : narmadhamail@yahoo.co.in
எங்களது இணைய தளம் : www.newbooklands.com

Pages: 192

**Price: Rs.75.00**

Paper used 13.6 kg. SPB N.S

☐ Kashta Nivarana Aabathutharana Sri Maha Kaala Bhairavar Aaradhanaiyum Upasanaiyum - The Hymns and rituals to worship Maha Kaala Bhairavar - in Tamil by S.S.Ragavacharyar ☐ This Edition: July 2010 ☐ Published by: T.S.Raamalingam, Narmadha Pathipagam Chennai - 600 017 ☐ D.T.P. Execution by: M/s. Muthu Graphics Chennai - 600 015 ☐ Printed at: M/s. Malar Printers Chennai - 600 034 ☐

# நூலாசிரியர் பற்றி...



19.7.1928-இல் திருச்சி மாவட்டம் மருதூரை அடுத்த ராஜேந்திரம் கிராமத்தில் T.T.ஸ்ரீநிவாஸார்யருக்கும் – விஜயவல்லி அம்மாளுக்கும் ஸ்ரீனிவாசன் – மாரியம்மனின் இன்னருளால் பிறந்தவர். அன்று வீட்டில் ஸ்ரீராமபட்டாபிஷேகம் நடந்ததால் ஸுந்தரராகவன் என்று பெயரிட்டனர்.

1950-ஆம் ஆண்டில் ஸம்ஸ்க்ருதக் கல்லூரி - மயிலை சென்னையில் **'பாரதி மோகன்'** என்ற பட்டமும், 15-7-1956-ஆம் நாளில் 2-ஆம் ஐந்தாண்டு வில்லுப்பாட்டுக்காக **'வெள்ளிக் கோப்பையும்'** பெற்றவர். 7-11-1953-ஆம் நாளில் சென்னைப் பல்கலைக் கழக **'ஸாஹித்ய சிரோமணி'** பட்டம் பெற்றவர். 20-11-1959-ஆம் நாளில் சென்னைப் பல்கலைக்கழக **'தமிழ் வித்துவான்'** பட்டம் பெற்றவர். ஏப்ரல் 1968-ஆம் ஆண்டில் **'பண்டிதச் சான்றிதழ்'** பட்டம் பெற்றவர்.

15-3-1953-ஆம் நாளில் **'ஸாஹித்ய விசாரதா'** பட்டம் பெற்றவர். 15-3-1983-ஆம் நாளில் புலவர் மன்றம் மூலம் பொன்னாடை போற்றப்பட்டு **'நல்லாசிரியர் விருது'** பெற்றவர்.

பல **'பூஜை முறை'** நூல்களையும், **'ஹோம நூல்'**களையும், மற்றும் பல நூல்களையும் எழுதியவர். எழுதியும் வருபவர்.

**'சுதேசமித்திரன்'**, **'ஹிந்துஸ்தான்'**, **'அமுத சுரபி'**, **'தினமணிக்கதிர்'**, **'மஞ்ஜரி'** போன்ற இதழ்களில் பல சிறுகதைகள், கட்டுரைகள் எழுதியவர்.

ஸாஹித்ய அகாடமி 14 மொழிகளில் வெளியிட்ட "Who is Who" நூலில் இடம் பெற்றவர். **'ஆயுர்வேத மருத்துவம்'** அறிந்தவர்.



# உட்பொதிவு







ஸ்ரீ

ஓம் ச்ரியை நம: ஓம் ஸ்ரீநிவாஸாய நம:
ஓம் மஹா மாயாயை நம:

# பகவான் ஸ்ரீ மஹா கால பைரவர் மகிமை

## முன்னுரை

பகவான் கால பைரவ தேவரின் ஆராதனையையோ – உபாஸனையையோ அல்லது இவரது யந்த்ரம் – மந்த்ரம் இவைகளை ஸாதனை செய்யும் போதோ பைரவ தேவனின் பெயரைச் சொல்லி ஜபிப்பது தவிர்க்க முடியாதது எனப்படுகிறது.

பொதுவாகப் பார்க்கும் போது மற்ற தேவி – தேவதைகளின் அவதாரங்களோடு குறிப்பிட்டுக் கூறுகையில் மிகச் சிறப்பாகச் சொல்லப்படுகிறது. பைரவ தேவரின் ஏதாவது ஒரு நாமாவை இடைவிடாது ஜபம் செய்யவேண்டும். அதாவது ''ஓம் பைரவாய நம: ''ஓம் வடுக பைரவாய நம: என்றும் நாமஸ்மரணை செய்யவேண்டும்.

இவ்வாறு மேலே கூறப்பட்ட நாமாவை ஜபிப்பதால் – மிகுந்த சிறப்பும் – விரைவில் பலனை அளிப்பதாகவும் சொல்லப்படுகிறது. இவரது ஸஹஸ்ர நாமாவை ஜபிப்பதால்

அதிகச் சிறப்பு உண்டு. இந்தப் பைரவருக்கு அரை டஜன் ஸஹஸ்ர நாமங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. மற்ற தெய்வங்களுக்குக் கூட இவ்வளவு இருக்காது எனலாம். இங்குள்ள ''பைரவ ஸஹஸ்ர நாமமும்'', ''வடுக பைரவ ஸஹஸ்ர நாமமும்'', பகவான் சங்கரர் மூலமாகப் பார்வதிக்குச் சொல்லப்பட்டது. இத்தகைய ஸஹஸ்ர நாமங்களில் எந்த ஒரு நாமாவையும் இடைவிடாது ஜபம் செய்தாலும் சரி – பூரா நாமாக்களைப் பாராயணம் செய்தாலும் சரி வெகு விரைவிலேயே மனம் மகிழ்ந்து வேண்டும் பலன்களை உடனே அளிக்கிறார் பைரவர்.

இவற்றைப் பாராயணம் செய்பவர்களுக்கு எந்தக் கஷ்டங்களும் நேரிடாது. பூத ப்ரேத உபத்ரவங்களும் வந்து வாட்டாது. அம்மை பயம் இராது. பகைவரிடம் பயம் நேராது. எல்லா விதமான பாபங்களிலிருந்தும் விடுபடுவது நிச்சயம். தெய்வ பயம் – ராஜ பயம் – க்ரஹபயமும் வாட்டாது. ஏதாவது விபத்து நேரிட்டாலும் உண்மையான உள்ளத்தோடு பாராயணம் செய்தால் உடனேயே ஆபத்து விலகிவிடும்.

இப் பைரவரின் 108 நாமாக்களை 12 ஆயிரம் தடவை ஜபம் செய்தால் பைரவ தேவர் சீக்கிரமே நேரில் தோன்றி உபாஸகரது எல்லா மன விருப்பங்களையும் நிறைவேற்றி வைப்பார். அவருக்குச் சிவலோக ப்ராப்தியும் கிடைக்கும். முச்சந்தி காலங்களிலும் 108 நாமாக்களைப் பயபக்தியுடன் நம்பிக்கை கொண்டு பாராயணம் செய்பவர்களின் கஷ்டமான விருப்பங்களும் நிறைவேறும். 6 மாத காலம் இதை ஜபித்தால் பூமி கிடைத்துவிடும். பகை பயம் தொலைய 8 மாதங்கள் ஜபிக்க வேண்டும். ராஜாவை வசமாக்க 3 மாதங்கள் ஜபிக்கவும். செல்வமோ – பிள்ளைப்பேறோ – நல்ல மணைவியோ பெற விரும்புபவர்கள் ஒவ்வொரு நாள் இரவிலும் ஒரு தடவை ஜபத்தை 3

மாதங்கள் வரை ஜபம் செய்தால் எல்லாவற்றையும் பெறமுடியும். இதில் எவ்விதச் சந்தேகமுமில்லை. இந்த ஜபத்தினால் நோயாளி நோயிலிருந்து விடுபட வழியுண்டு. சிறையிலிருந்து விடுபடலாம். இரவும் – பகலும் படித்தால் எந்த விருப்பத்தையும் நிறைவேற்றிக் கொள்ளலாம்.

இதைப் பரம ரகசியமாக வைத்திருக்க வேண்டும். அறத்தை வெறுப்பவர்களிடமும் – நாஸ்திகர்களிடமும் மற்றவர்களுக்குத் தீங்கிழைப்பவர்களிடமும் தெரிவிக்கக் கூடாது.

ஆடம்பர மற்றவர்களும் – அறவழிச் செல்பவர்களும் – நம்பிக்கையும் – ஆசாரமும் – உள்ளவர்களும் இதைப் பாராயணம் செய்து மிகுந்த பயனைப் பெறலாம் என இவ்வாறு இதன் மகிமையை – பைரவரின் சிறப்பைச் சிவபெருமான் பார்வதி தேவியிடம் எடுத்துக் கூறுவதாகும். இதை ருத்ரயாமளம் என்ற தந்த்ர சாஸ்த்ரம் விளக்கிக் காட்டுவதைக் காணலாம்.

எனவே இத்தகைய சிறப்பு மிக்க நூலை வெளியிட முன் வந்த திருவாளர் சீரிய சிந்தனையாளர் நர்மதா பதிப்பக உரிமையாளர் டி. எஸ். இராமலிங்கம் அவர்களும் அவர்களின் குடும்பத்தாரும் நீடூழி வாழத் திருமலை நாயகனிடமும் சமயபுர நாயகியிடமும் இறைஞ்சி அன்பர்களின் திருக்கரங்களில் தவழ விடுகிறேன்.

நன்றி

**எஸ். எஸ். ராகவன்**

ஸ்ரீ பைரவரின் மகிமை நிறைவு பெற்றது.

ஓம் சாந்தி : ஓம் சாந்தி : ஓம் சாந்தி

|| ஓம் ||





ஸ்ரீ :

# ஸ்ரீ பைரவரின் அவதாரம்

உலகத்தில் தருமத்திற்கு அழிவு ஏற்படும்போது சில அசுர ஜன்மங்களின் மூலமாகச் சில அக்கிரம நிகழ்ச்சிகள் தோன்றி அறவழிப்பற்று கொண்ட நல்லவர்களைத் துன்பத்திற்கு உள்ளாக்குகின்றனர். பாபச் சுமைகளினால் பூமியானது காப்பாற்று காப்பாற்று எனக் கூக்குரல் எழுப்புகிறது. அது சமயம் பரப்ரம்மமான பரமேச்வரன் பாரதப் புண்ய பூமியில் அவதாரம் செய்து அதர்மத்தையும் - அக்கிரமக்காரர்களையும் அழித்து தர்மத்தை நிலை நாட்டுகிறார். ஹிரண்ய கசிபு - ஹிரண்யாக்ஷன் - ராவணன் - கும்பகர்ணன் - கம்சன் முதலிய தீய சக்திகளை அழித்துப் பக்தர்களைக் காக்க வேண்டி பகவானான விஷ்ணு ந்ருஸிம்ஹனாகவும் - ஸ்ரீ ராமனாகவும் - ஸ்ரீ கிருஷ்ணனாகவும் அவதரித்த சமயம் ஸ்ரீராமனோடு கூடச் சிவபிரான் ஹனுமான் வடிவத்தில் அவதரித்தார்.

சிவபிரானின் உருவம் ராக்ஷஸர்களிடமிருந்து உலகைக் காப்பதற்கல்ல - ஆனால் - தனது சக்தி ஞானம் இவற்றின் மதத்தால் அறிவை இழந்து நிற்கிற உலகத் தந்தையான ப்ரம்மாவுக்கு நல்ல பாடம் கற்பிக்கத்தான் உருவெடுத்தார். ஸ்ரீராமனும் - ஸ்ரீ கிருஷ்ணனும் ராக்ஷஸர்களை அழிப்பதற்காகவே பூமியில் தோன்றினர்

என்றால் - சங்கரனோ பிரம்மதேவனுக்கு இருந்த அறிவு ப்ரமையை நீக்குவதற்காகவே ஸ்ரீ பைரவ தேவரின் வடிவத்தில் அவதரித்தார். அவரது பிறவிக்குப் பைரவ தேவர் எல்லாத் தேவர்களையும் - கடவுளர்களையும் - அவர்களது அவதாரங்களையும் விட மிகச் சிறந்தவர் என்று காட்டவேதான்.

நமது பழம் பெரும் தர்ம நூல்களில் பல இடங்களில் பைரவதேவரின் உற்பத்தி (பிறவி) பற்றி சிவனே பைரவனாக அவதரித்தது பற்றிப் பல கதைகள் கூறப்பட்டுள்ளன.

ஸ்கந்த புராணத்தின்படி - ஒரு சமயம் அகஸ்தியர் சிவனாரின் மூத்த பிள்ளையான கணேசரின் சகோதர னான கார்த்திகேயனிடம் பைரவ நாதனின் பிறப்பு பற்றிய கதையைச் சொல்லும்படி வேண்டினார். ''ஸ்வாமீ! பகவானான பைரவநாதனின் சக்திகளையும் - அருள் திறத்தையும் - இரக்கத் தன்மையும் பற்றி உலகோர் ஏதோ கொஞ்சம் அறிவர். பைரவரது அவதார காரணத்தையும் - இயல்பையும் பற்றி எனக்குத் தெரியாது. இருந்தாலும் பக்தர்களின் நலனை உத்தேசித்துப் பைரவர் அவதரித்த விபரம் மட்டும் அறிவிக்கிறேன். இதனால் உலகம் அனைத்திலுள்ள பக்தர்களுக்கும் மங்களம் உண்டாகும்'' எனக் கூறிக் கதையைத் தொடங்கினார்.

அன்றொரு சமயம் மஹாமேரு பர்வதத்தில் பிரம்ம தேவனுடன் கூடப் பல தேவர்களும் அமர்ந்து தர்மத்தைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டனர். அதே நேரம் சில மஹரிஷிகளும் அங்கு வந்தடைந்தனர். வந்தவர்கள் தேவர்களையெல்லாம் வணங்கி வழிபட்ட பிறகு எல்லோரையும் பார்த்து ஒரு கேள்வி கேட்டார்.

"ஏ தேவகணங்களே! நீங்கள் அனைவரும் மகான்கள் - பூஜைக்குரியவர்கள் ஆனாலும் உங்களுக்குள்ளே யார் பெரியவர்? எல்லா வல்லமையும் பொருந்தியவர்? தயைகூர்ந்து இதை எங்களுக்குத் தெரிவிக்க வேண்டும் என்றார்.

கேள்வி சற்று சிக்கலானதாகவும் - வாதத்திற்குரிய தாகவும் இருந்தது. எனவே தேவதைகள் யாவரும் பதிலுக்காகப் பிரம்மனை நோக்கினர். மிகவும் சரியாக இதற்கானதொரு பதிலைப் பிரம்மாவும் எப்படிச் சொல்ல முடியும்?

ஈசனின் மாயை மிகவும் விசித்திரமானது. எப்பொழுது எது நேரும் என்பதை எவரும் கூற முடியாது. அஹங்காரம் இருட்டாகிறது. சினம் செவிடாகிறது. அஹங்காரத்தினால் விழுங்கப்பட்ட ஆளுக்குத் தன்னைத் தவிர வேறு யாரையும் பார்க்க முடியாது என்றால் சினம் கொண்டவருக்கோ மற்றவரது யோசனைகள் சரியாகப் படாது. இவ்வாறுதான் அப்போது ஏற்பட்டது. பகவானான சங்கரரின் மாயைக்கு வசியமாகி அந்நேரம் அஹங்காரத்தில் திளைத்தார். அவர் தனது ஐந்து முகங்களாலே இடையறாது படித்துக் கொண்டும் - விஷ்ணுவைத் துதித்துக் கொண்டும் இருக்கிற பிரம்மனின் நல்லறிவு அஹங்காரமாகிற இருளில் மூழ்கிக் கலங்கியிருந்தது. இத்தகைய பிரம்மா - முனிவர்களிடம் - "ஏ முனிவர்களே! நானே படைப்புகளைச் செய்கிறேன். ஜீவன்களையும் படைக்கிறேன். இது மட்டுமல்ல நானே ஸ்வயம்பூ - நானே தோன்றியவன். என்னை எவரும் படைப்பவர் இல்லை. எப்பொழுது நானே எல்லாவற்றையும் உண்டாக்குகிறேனோ - அப்பொழுதே நான் பெரியவனாகிறேன். இதில் சிறிதும் ஐயமில்லை.

மூவுலகைக் காப்பவனும் - படைப்பை நடத்துபவனுமான விஷ்ணு பகவானின் அம்சமான ''ருதுதேவனும்'' அங்கிருந்தார். பிரம்மனின் செருக்கு மிகுந்த இவ்வார்த்தைகளைக் கேட்டு - ருது தேவனுக்குச் சினம் பொங்கியது. அவரும் தனக்கிருக்கும் சக்தியின் செருக்கினால் பிரம்மனைப் பார்த்துக் கத்தியபடியே - ''ஏ பிரம்ம தேவா! நீ அறியாமைக்கு அடிமையாகி - உன்னையே பெரியவனென்று கூறிக் கொள்கிறாய். உன்னை விடவும் அதிகச் சக்தி வாய்ந்தவன் நானிருக்கிறேன். உலகைப் பாதுகாப்பவன் - சிருஷ்டியை நடத்துபவன் விஷ்ணுவின் பேரொளி - மேலானவன் நானிருக்கிறேன். உன்னைவிடப் பெரியவன் மட்டுமல்ல. பெரிய மகானுமாவேன். எல்லாத் தேவர்களையும்விடச் சிறந்த சக்தியுள்ளவன் நான். மறுவினாடி இருவருக்குள்ளும் சண்டை மூண்டது. இப்படி இருவருக்குள்ளேயும் வாக்கு வாதம் முற்றிச் சண்டையாக மாறியதைக் கண்ட முனிவர்கள் தேவர்கள் கூட இவர்களைச் சாந்தப்படுத்த முடியாது போலாகியதே என்று திகைத்தனர். உடனே முனிவர்கள் ''நீங்கள் இப்படிச் சண்டையில் ஈடுபடுவது சரியில்லை. இவ்வுலகில் உள்ள பண்டைய நூல்களையும் - சாஸ்திரங்களையும் - நான்கு மாமறைகளையும் ஈசனே படைத்தவர். ஆகவே அந்த வேதத்திடம் சென்று ஏன் தீர்ப்புச் சொல்லச் செய்யக் கூடாது? எல்லாத் தேவர்களையும் விடச் சிறந்தவர் யார்? எல்லாரையும் விட யார் பெரியவர்? என்று ஏன் கேட்கக் கூடாது?'' என்றதும் முனிவர்களும் - தேவர்களும் அனைவரும் வேதத்தை அணுகிச் சென்றனர். அப்போது பிரம்மாவும் - ருது தேவரும் - 'ஏ வேதங்களே! நீங்கள் சத்யவாதிகள் எல்லாத் தேவர்களிலும் யார் உயர்ந்தவர்கள் என்பதை

நீங்கள் முடிவு கட்டிச் சொல்லுங்கள். எங்களது இந்தச் சந்தேகத்தை நிவர்த்தி செய்யுங்கள் என்றதும்,

அவர்களது சொல்லைக் கேட்டு - ருக்வேதம் -யாரால் எல்லாம் உண்டாகிறதோ - கடைசியில் யாரிடத்தில் லயத்தை அடைகிறதோ - அவன் ஒருவனே - அவனே சிவபெருமான். அவன் ஒருவனே உண்மையானவன் அவனுக்கு நிகராக எவருமிலர். பிறகு யஜுர் வேதம் ருக்வேதத்தை ஆமோதித்து, உலக மக்களும் - யோகமும் தவத்தின் மூலமாக யாரைச் சென்றடைய இடைவிடாது செயலாற்றுகின்றதோ - அவர் ஒருவரே சிவன்தான் எனவே அவரே சிறந்தவர் - பெரியவர். ஸாம வேதம், அவ்விரு வேதங்களைப் பின்பற்றியே - வெகு துல்யமாக யாருடைய ஒளியினால் - ப்ரஹ்மாண்டமே ஒளியுடன் திகழ்கிறதோ - யோகியர் எவரை எண்ணி ஒவ்வொரு நேரமும் த்யானம் செய்கிறார்களோ - நல்ல குடும்பஸ்தன் யாருடைய பூஜையையும் - ஆராதனையையும் செய்கின்றனரோ - உலகமே யாரிடத்தில் உள்ளதோ - யார் உலகம் முழுவதும் பரவியிருக்கிறாரோ - அவர் ஒருவரே த்ரியம்பகரான சிவபெருமானாவார். அவரே உயர்வானவர். அவரை விடப் பெரியவர் எவருமிலர். பிறகு நான்காம் வேதமான அதர்வவேதம் - பகவான் சிவனது தயாள குணத்தையும் - எளிய தன்மையையும் வருணித்தபடி - யார் தனது பக்தர்களின் சிறிதளவு சேவையினாலும் - ஆராதனையினாலும் மிகவும் மகிழ்வு கொண்டு - அவர்களது துயரங்களையெல்லாம் தூர விலக்குகிறாரோ; - அவரே ஆனந்தத்தை அருள்கிற - கைவல்யத்திலுள்ள பகவான் சிவபிரானே. எல்லாரையும் விட மஹான் - அவரை விட உலகில் வேறொரு பெரியவர் எவருமிலர்.

இப்படியாக நான்கு மாமறைகளும் - சர்வ சக்திமான் எல்லோரையும் விடப் பெரியவன் - மஹான் சிவனே ஆவான்'' என்றதும் - மற்ற தேவதைகளும் முனிவர்களும் வேத வார்த்தையை ஏற்றுக் கொண்டனர். ஆனால் ருது தேவனும் - பிரம்மனும் சினத்திலும் - செருக்கிலும் மிதந்தனர். வேதத்தின் தீர்ப்பைக் கேட்டும் பிரம்மனின் மயக்கம் தீரவில்லை. மேலும் தீவிரச் செருக்குடன் ''நான் உங்களது யோசனையை ஒப்புக்கொள்ள முடியாது. அந்தச் சிவன் தானே புழுதியாகி நிற்கிறான். சாம்பலை உடலில் பூசிக் கொண்டிருக்கிறான். தலையில் சடையை வைத்திருக்கிறான். மேலும் நாகங்களையே அணிகலனாகக் கருதுகிறான். அவ்வாறிருக்கையில் சிவன் எப்படி உயர்ந்தவனாவான்? அவன் திசையையே ஆடையாகப் பெற்றவன். அவன் புலித்தோலையும் - யானைத் தோலையும் போர்த்தியிருக்கிறான். அவன் சவாரி செய்ய நல்ல வாகனம் கிடையாது. கிழட்டுக்காளையே அவனது வாகனம். அவன் எப்படி பரப்பிரம்மமாக ஆகமுடியும்? அவனை நன் பரமாத்மாவாக ஒப்புக் கொள்ள இயலாது. அவனை விட மஹான் நானே ஆவேன்.''

அதே சமயம் ஸநாதன தர்மாக்ஷரமான ப்ரணவம் ஆன ஓங்காரம் பிரம்மாவின் எதிரில் தோன்றி அவர்களைச் சாந்தப்படுத்த முயன்றது. சமாதானம் செய்யவும் முயன்றது. ''ஹே பிரம்மாவே! பகவானான சங்கரன் ஸனாதன ஒளியாவான். ஆனந்த ரூபமான ''சிவா'' அவனது அளவிறந்த சக்தியாகும். ஆகவே இதைப் பூரணமாக நம்பு. சிவனை விடப் பெரியவன் எவரும் இலர் என்று''. ஓங்காரம் ஒவ்வொரு விதமாகத் தெளிவு படுத்தியும் - பிரம்மனும் - ருதுவும் மகிழ்ச்சி

பெறவில்லை. பிரம்மன் சினம் கொண்டு இப்பொழுதும் சிவனைத் திட்டிய வண்ணமிருந்தான். சினத்தின் உச்ச நிலையில் இருந்து ஆவேசங்கொண்டு - நல்லது - கெட்டது - உயர்வு - தாழ்வு - மெய் - பொய் - என்ற ஞானம் சிறிதும் இல்லாதிருந்தான்.

இதே சமயம் ஒளிப்பிழம்பு - பிரம்மன் - ருது இவர்களின் அருகே வந்து நின்றது. அந்தத் தீப்பிழம்பின் ஜ்வாலை மிகவும் தீக்ஷண்யமாக இருந்தது. இது அங்கே சூழ்ந்திருந்த எல்லாத் தேவர்களையும் முனிவர்களையும் தன்னுடைய ஒளிப் பிழம்போடு ஒன்று சேர்த்தது. சிறிது நேரத்திற்குள்ளாகவே அந்த ஒளிப்பிழம்பிலிருந்து ஓர் அழகிய பாலகன் தோன்றினான். சிவபெருமானை வசை மாறி பொழிந்த பிரம்மனின் ஐந்தாவது முகம் அங்குத் தோன்றிய பாலகனிடம் - ''இந்த இருவருக்கும் இடையே வந்து தோன்றிய நீ யார்?'' என்று கேட்டது. பிரம்மனின் இந்தக் கேள்விக்குப் பதில் கூற வேண்டிய இடத்தில் அச்சிறுவன் பலமாக அழத் தொடங்கினான். பிரம்மாவுக்குச் சினம் பீறிட்டது.

தான் உலகைப் படைப்பவன் என்ற செருக்கும் அவரைச் சூழ்ந்து கொண்டது. ஒரு வேளை இந்தச் சிறுவன் நமது ஐந்தாவது முகத்திலிருந்து தோன்றியிருப்பானோ என்று கருதினான். அதன்பின்பு பிரம்மா அச்சிறுவனை நோக்கி - ''சிறுவனே! நீ எனது சிரசிலிருந்து தோன்றியிருக்கிறாய் - இவ்வாறு தோன்றிய நீ அழுது கொண்டிருக்கிறாய். அதனாலே உன்னை ''ருத்ரன்'' என்ற பெயரிட்டு அழைக்கிறேன். நீ என்னையே சரணடை. அழாதே. உன்னைக் காப்பாற்றுகிறேன்'' என்றார்.

இப்படிச் செருக்கோடு பிரம்மன் கூறிய வார்த்தையைக் கேட்டதும் - அச்சிறுவன் மிகத் தேஜஸ் பொருந்திய உருவங்கொண்டு மாறுபாட்டை அடைந்தான். இப்படிப் பிரம்மனின் ஜ்யோதியிலிருந்து உண்டான சிறுவன் பூர்ண புருஷனாக மாறுபாட்டை அடைந்ததும் அவனோடு - ''ஏ குழந்தாய்! நீ எனது சிரசிலிருந்து உண்டானதின் காரணமாக இவ்வுலகைக் காக்கும் வல்லமை படைத்தவனாக ஆகிறாய். எனவே, உனக்குப் ''பைரவன்'' என்ற பெயரைச் சூட்டுகிறேன். உன்னிடம் காலனும் பயந்தவனாக இருப்பான். எனவே, உனக்குக் ''காலபைரவன்''' என்று பெயரிடுகிறேன். குழந்தாய்! நீ துஷ்டர்களை அடக்கி ஆளப்பிறந்தவனாக இருப்பதால் உலகம் உன்னை ''ஆமர்த்தகன்'' என அழைக்கும். நீ பக்தர்களின் கஷ்டங்களையும் - பாவங்களையும் போக்கு. உன்னை அவர்கள் கொஞ்சம் பூஜித்தாலும் - ஆராதனை செய்தாலும் - நீ மிகவும் மகிழ்ச்சி கொண்டு. க்ஷண நேரத்தில் கஷ்டம் போக்கிட வேண்டும். இதனால் உனக்கு இன்னொரு பெயர் ''பாப பக்ஷகன்'' என்பதாகும். நீ இவ்வுலகில் மிகவும் பிரசித்தியைப் பெறுவாயாக. இன்று முதல் நீ முக்தி க்ஷேத்ரமும் - சிவனார் நகரமும் ஆன காசியை அடைந்து அதற்கு அதிபதியாகி ''காலராஜன்'' என்ற இடத்தைப் பெறுவாயாக. இன்றிலிருந்து காசிக்ஷேத்ர வாசிகளின் பாவ புண்யங்களை வகுத்து எழுதுபவன் சித்ரகுப்தன் இல்லை, இனி நீயே அதனை வைத்துக் கொள்வாயாக. நீயே அம்மக்களது கர்மாக்களுக்குரிய தண்டனையையும் - பாராட்டையும் தெரிவிப்பாயாக'' என்றார்.

இப்படியாகப் பிரம்ம தேவன் தனது சிரசிலிருந்து தோன்றியவன் என்பதை அறிந்து அந்தச் சக்திமானான

புருஷனுக்குப் பல பெயர்களையும் சூட்டி ஏராளமான வரங்களையும் கொடுத்துக் கொண்டிருந்தான். பிரம்ம தேவன் பைரவனைக் காசி க்ஷேத்திரத்திற்கு அதிபதியாக்கினான். சிவபிரானுக்கு அவமானத்தையும் செய்தான். அந்தச் சர்வ சக்திமான் பைரவதேவன் - முதலில் பிரம்மனால் அளிக்கப்பட்ட வரங்களைப் பெற்ற வண்ணம் இருந்தான். ஆனால் காசிக்கு அதிபதியாக ஆனதும் பிரம்மாவோடு போர் புரியலானான். பிறகு தனது கூரிய நகங்களைக் கொண்டு பிரம்மனின் ஐந்தாவது தலையைக் கொய்து பூமியில் வீசினான். இப்படித் தனது நகத்தால் பிரம்மனது தலை கிள்ளப்பட்டதும் பைரவ தேவன் மிக்க சினப்பார்வையோடு - ''ஏ பிரம்மனே! உனது இந்த ஐந்தாவது முகந்தானே இதுவரை திட்டிக் கொண்டு இருந்தது. இதே முகத்தால் தானே? சிவனைப் பகைத்துக் கொண்டு கண்டபடி பேசப்பட்டது? உன்னுடைய உடலுறுப்பில் எந்த உறுப்பு தவறு செய்தாலும் அதை உடனே வெட்டித் தண்டனைக்கு உள்ளாக்குவேன்.

தனது ஐந்தாவது முகத்தை வெட்டியதும் பிரம்மனுக்கு ஞானோதயம் உண்டாகியது.

அதுவரை பிரம்மா செருக்கிலும் - வீண் பிரமையிலும் சிக்கி உழன்றான். அதன் பிறகு இப்பொழுது

---

குறிப்பு : இந்தப் பைரவர் சிவபெருமானிடம் இருந்து தோன்றியவர் மட்டுமல்லர் - பிரம்மனிடமிருந்தும் - விஷ்ணுவினிடமிருந்தும் தோன்றியவர் என்பதும் இப்படி மும்மூர்த்தி ஸ்வரூபமானவர் என்பதையும் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

ஓம்

சிவபெருமானே எல்லோரையும் விடச் சிறந்தவன் - உயர்ந்தவன் - பரப்பிரம்மம் - என்பதை மனமார ஒப்புக் கொண்டான். இப்பொழுது பிரம்மா தான் சிவபிரானுக்கு இழைத்த தவறான செயலை எண்ணி வருந்தலானான். சிவபிரானை வித விதமாக போற்றிச் சொல்லித் துதி செய்யலானான். இப்படிப் பிரம்மா சிவனைத் தோத்தரிப்பதைக் கண்டு ஜகத் ரக்ஷகனான பெருமான் விஷ்ணுவும் அவ்விடம் வந்து சேர்ந்தார். பிரம்மா, மற்ற தேவர்கள் இவர்களோடு சேர்ந்து விஷ்ணுவும் சிவபெருமானின் துதிகளில் கலந்து கொண்டு வந்தனை செய்வதில் ஈடுபட்டார்.

ஸ்ரீ கால பைரவரின் அவதாரம் நிறைவு பெற்றது.

ஓம் சாந்தி : ஓம் சாந்தி : ஓம் சாந்தி

|| ஓம் ||



ஸ்ரீ :

### பிரம்ம சாபம் நீங்க

## மூவுலக யாத்திரை

சிவபெருமானைக் கண்டபடி திட்டிய பிரம்ம தேவனின் ஐந்தாவது முகம் பைரவ தேவனால் கிள்ளி வீசப்பட்டதும் பிரம்மா - விஷ்ணு - மற்ற தேவர்கள் அனைவரும் ஒன்று கூடிச் சிவபெருமானைப் போற்றித் துதித்து நின்றனர். பகவானான சங்கரனே உலகில் சிறந்தவன் - எல்லாம் அறிந்தவன் மிகுந்த உதாரகுணம் படைத்தவன் - அருள் உள்ளங் கொண்டவன் என்று பாராட்டிப் புகழ்ந்ததும் பகவான் சிவபெருமான்

அவ்விடத்தில் தோன்றித் தனது அமுதமயமான பேச்சின் மூலமாகப் பிரம்மனுக்கும் - மற்றைய தேவர்களுக்கும் அபயதானம் செய்தார். தேவதைகள் முதலானோர் நிம்மதியையும் - சந்தோஷத்தையும் அடைந்த பின்பு சிவபிரான். அவர்களை அவரவர் உலகிற்குச் செல்லுமாறு ஆணையிட்டார். அவர்களும் அதன் பின்னர் தங்கள் தங்கள் செயல்களில் அவர்கள் ஈடுபடலாயினர். பைரவ தேவருக்கு எந்த ஒரு ஸ்த்தானமும் முடிவு செய்யப்படவில்லை. எனவே அவர் சிவனது அருகிலேயே நிற்கலானார். சிவனின் ரௌத்ர வடிவமே பைரவதேவன். காலம் பூராவும் ஆட்சி செய்யும் சக்தி பரிபூரணமாக உள்ள தேவன். பகவானான சிவனின் அவதாரங்கொண்டதால் சிவனுக்குச் சமமாக வைத்துப் பூஜிக்கத் தக்கவர். அவர் எல்லாவற்றிலும் திறன் மிகுந்தவர் இருந்தாலும் பைரவன் பிரம்மதேவனின் சிரசைத் தனது கை நகத்தினால் கிள்ளினான். அது மிகப் பெரிய அளவு பாபம் ஆனது. பிரம்மஹத்தி தோஷம் உள்ளது. அதுவே பிராம்மணஹத்தி ஆகும். அது மிகப் பயங்கரமான பாதகச் செயலாகும்.

இதன் காரணமாக - மனிதர்களுக்குச் சிக்ஷை அளிப்பவரும் - தர்மத்தை மரியாதிப்பவருமான சிவபெருமான் தனது அவதாரமாக வந்த பைரவனுக்குக் கட்டளையிட்டார் - அதாவது - "ஏ பைரவா! நீ பிரம்மதேவனின் ஐந்தாவது தலையை வெட்டிப் பிரம்மஹத்தி தோஷத்திற்கு ஆளானாய். இது மிகப் பெரிய பாவச் செயல். ஆகவே நீ இந்தப் பாபச் செயலிலிருந்து விடுபெற வேண்டுமானால் - பிரம்மனின் வெட்டப்பட்ட தலையை ஒரு கையிலும் - ஒரு கையில் பிக்ஷைப்பாத்திரத்தையும் ஏந்திய வண்ணம் யாவரும் அறியும்படி மூவுலகையும் சுற்றி வர வேண்டும்.

நீ நான்கு கைகளைக் கொண்டவனாக ஆவாய். எனவே மற்ற இரு கைகளுள் ஒன்றில் எனது பிரியவாத்யமான உடுக்கையையும் - இன்னொரு கையில் த்ரிசூலத்தையும் தரித்துக் கொள்வாயாக. எந்த இடத்தில் உனது கையில் ஒட்டிக் கொண்ட பிரம்மனின் வெட்டுப்பட்ட சிரசு தானாகவே விடுபெற்று விழுகிறதோ - அதே இடத்தில் நீ இந்தப் பிரம்மஹத்திப் பாபத்திலிருந்து விடு பெறுவாயாக. அது உனது கையை விட்டு நீங்காத வரை அந்தப் பிரம்மஹத்தி உன்னைச் சும்மா விடாது. தொடர்ந்து வந்து வாட்டிக் கொண்டே இருக்கும்.

சிவபிரான் பைரவருக்குக் கட்டளையிடும் போதே தனது தேஜஸின் மூலமாகப் பயங்கரமான ஒரு பெண்ணைப் படைத்தார். மிகவும் கறுப்பாகவும் பயங்கரமாகவும் இருந்த அந்தப் பெண் தனது உடல் பூராவும் சிவந்த ஸிந்தூரப் பொடியைப் பூசிக் கொண்டிருந்தாள். செவ்வாடை புனைந்திருந்தாள். மிகப் பயங்கரமான உருவங் கொண்ட அந்தப் ''பிரம்ம'' ஹத்யா என்கிற பெண் தனது நீண்ட நாக்கைத் தொங்கவிட்டபடி ஆட்டி ஆட்டி விண்ணிலிருந்து கொட்டும் உதிரத்தை உறிஞ்சிய வண்ணம் இருந்தாள். கூடவே அங்குமிங்கும் அலைந்தபடி கர்ஜித்து கொண்டும் இருந்தாள். பைரவனுக்கு விபரீதமாக இந்தப் பெண்ணுக்கு இரு கைகளே இருந்தன. ஒரு கையில் உதிரம் நிறைந்த மடக்கும். இன்னொரு கையில் மிகக் கூரிய கட்டாரியும் வைத்திருந்தாள். பைரவதேவனுக்குச் சிவபெருமான் எப்படிப் பிரம்மஹத்தி பாபத்திலிருந்து விடுபெற வழி சொன்னாரோ - அதேபோல இந்தப் பிரம்மஹத்தி என்ற பெண்ணிற்கும் - ''ஹே பிரம்ம ஹத்தியே! இந்தப் பைரவ தேவன் மூவுலகும் சுற்றி வலம் வரும் வரை நீ அவனைப் பின்தொடர்ந்து வந்த

வண்ணமிருக்க வேண்டும். உனக்கு எங்கு வேண்டுமானாலும் செல்லக் கூடிய சக்தியும் - நுழையக் கூடிய சக்தியும் உண்டு. ஆகையால் நீ இந்தப் பயங்கரமான உருவத்தோடு இடைவிடாது இவனைப் பின் தொடர்ந்து செல்வாயாக. இவனை எங்கும் ஒரே இடத்தில் ஸ்த்திரமாக நிற்க விடாதே. நீ எனது நகரமான காசி நகரத்திற்குள் நுழைய முடியாது. பைரவ தேவன் காசிக்குள் வந்து விட்டால் நீ நகரத்தின் வெளியிலேயே தங்க வேண்டும்'' எனக் கட்டளையிட்டுச் சிவன் மறைவு பெற்றார்.

பைரவன் சிவபெருமான் கூறியபடி மூவுலகையும் யாத்திரை செய்யப் புறப்பட்டார். அவரைப் பின் தொடர்ந்து பிரம்மஹத்யா என்ற பெண்ணும் சென்றாள். இப்படியாக நீண்ட நெடும் பயணமாக நகரங்களையும் - கிராமங்களையும் - காடுகளையும் - தேவர்களின் பல உலகங்களையும் இப்படி மூவுலகங்களையும் சுற்றி வரும்போது - ஒரு நாள் பைரவன் விஷ்ணு உலகையும் சென்றடைந்தார். அப்பொழுது பகவானான விஷ்ணு - லக்ஷ்மீ தேவியிடம் ''பிரியே! சிவனது மாயையைப் பார். இது சிவபெருமானின் அபார லீலைகளுக்குரிய சாட்சி. தானோ பக்தர்களின் பாபங்களையெல்லாம் தீர்த்து நல்வழிப்படுத்துபவன். இப்படி உலக மக்களது தோஷங்களையெல்லாம் ஒரே நொடியில் தீர்த்து வைக்கக் கூடிய திறமையுள்ள சிவபெருமான், தான் தனது அவதார வடிவங்கொண்ட பைரவ தேவனின் வடிவில் இருந்தபடி பிரம்மஹத்தி பாபத்திலிருந்து விடுபெற வேண்டி எல்லா இடங்களிலும் சுற்றி அலைகிறான். இதுவும் பகவானான சிவபெருமானுடைய இணையற்ற மகிமைதான். பாபத்தின் விளைவால் உலகையும் - தேவர்களையும் விழிப்புறச் செய்ய வேண்டியே எடுத்த உருவமே மூவுலகச் சுற்றல் முறையும். இப்படி எல்லா உலகங்களையும் - சுற்றி வருதல் செய்து ஒரு நாள் காசி

மாநகரைச் சென்றடைந்தார். முக்தி க்ஷேத்ரமான காசி புரியில் அந்த ப்ரம்மஹத்யா என்ற பெண் நுழைய முடியவில்லை. ஆகவே அவள் வெளியிலேயே நின்று விட்டாள். இவ்விதம் சிவனின் மாயையினால் அந்தப் பெண்ணால் பைரவ தேவனின் பின் தொடர்வது விடப்பட்டது.

காசி நகரிலுள்ள ஓரிடத்தில் பைரவ தேவனின் கையில் ஒட்டியிருந்த மண்டையோடு விழுந்தது. பிரம்மனின் வெட்டுண்ட கபாலம் விழுந்த இடமே ''கபாலமோசன்'' என்ற பெயரிட்டு அழைக்கப்படுகிறது.

காசி மாநகர் வந்து பைரவதேவர் பிரம்மஹத்தி தோஷத்திலிருந்து விடு பெற்றார். எனவே பிரம்மன் தந்த வரங்களைப் பூர்த்தி செய்ய வேண்டிய சிவபெருமான் பைரவ தேவனைக் காசிநகர அதிபதியாக ஆக்கினான். காசி நகர வாசிகளின் கணக்கு வழக்குகளைக் கவனிப்பதும் தண்டனை அளிப்பது உள்ள அதிகாரத்தையும் வழங்கினான்.

பைரவ தேவன் சிவனின் மறு அவதாரம். சிவனுக்கு நிகரானவன். பல பெயர்களையும் - வடிவங்களையும் பெற்றவன். உலகக் கதைகளில் பல வழிகளில் இவரது சிறப்பு பற்றிக் கூறப்படுகிறது. தார்மிக க்ரந்தங்கள் இவரைப் பலவாறாகப் புகழ்வதைக் காணலாம். இவரை வழிபட்டு ஆராதனை - உபாஸனை செய்தால் பல நன்மைகள் நம்மை வந்தடையும். பல தோஷங்களும் நிவர்த்தியாகும்.

**மூவுலக யாத்திரை நிறைவு பெற்றது**

**ஓம் சாந்தி : ஓம் சாந்தி : ஓம் சாந்தி :**

**|| ஓம் ||**

ஸ்ரீ :

# சிவனது பிரம்ம சாபம் நீங்கிய வரலாறு

## (வேறு வகை)

சிவபெருமான் ஐந்து சிரசைக் கொண்டவர். பிரமனும் ஐந்து சிரசைக் கொண்டவர். இப்படி இருவருக்கும் ஒரே மாதிரி ஐந்து சிரசுகள் இருந்ததால் யார் யார் என்று அடையாளம் கண்டு கொள்ள முடியாது என்று கூறிச் சிவபெருமான் பரமனது தலையைக் கிள்ளி வீசினார். அந்த நான்மறைக் கடவுளான பிரமனின் தலை சிவனின் கையிலேயே ஒட்டிக் கொண்டது விடுபடவில்லை.

அப்போது பிரமன் ''இந்தப் பிரம்ம கபாலம் உமது கையிலிருந்து விடுபெற வேண்டுமானால் மூவுலகிலும் சுற்றித் திரிந்து ரத்தத்தைப் பிச்சை கேட்டு - அந்த ரத்தம் கபாலத்தில் நிரம்பி வழிய வேண்டும் அப்போதுதான் அது கையிலிருந்து விடுபெறும். இல்லையேல் விடுபடாது. அப்படியே தங்கிவிடும் என்றார்.''

சிவபெருமான் மூவுலகம் சுற்றி ரத்தப்பிச்சை கேட்டும் யாருடைய ரத்தமும் நிரம்பவில்லை என்பதைக் கண்டு வருந்திக் கடைசியில் திருமாலை வந்தடைந்து யாசிக்க அவர் மனம் இரங்கி சிவனுடைய பிரம்ம சாபத்தை நீக்க வேண்டித் தமது திருமார்பைப் புண்ணாக்கி ரத்தத்தை அந்தப் பிரம்ம கபாலத்தில் பாய்ச்சுகிறார். அது நிரம்பி வழிந்ததும் அந்தக் கபாலம் உடனே சிவனது கையிலிருந்து விடுபெறுகிறது. பிரம்மன் இட்ட சாபமும் நீங்குகிறது என்பது புராணம் கூறும் வரலாறு. இதேபோல் ஆழ்வார் பொய்கையாரும் கூறுவதைக் காணலாம்.

''பண்புரிந்த நான் மறையோன் சென்னிப் பலியேற்ற
வெண்புரிநூல்மார் பன்வினைதீர - புண்புரிந்த
ஆகத்தான் தாள்பணிவார் கண்டீர் அமரர்தம்
போகத்தால் பூமியாள் வார் ''

[முதல் திருவந்தாதி 46ஆம் பாசுரம்]

ஓம் சாந்தி : ஓம் சாந்தி : ஓம் சாந்தி

ஸ்ரீ :

# பூதத்தாழ்வார் மூலம் அறியப்படுவது

ஏறேழும் வென்றடர்ந்த எந்தை எரிவுருவத்
தேறேறி பட்டவிடுசாபம் - பாறேறி
உண்டதலை வாய்நிறைய கோட்டங்கை நண்குருதி
கண்டபொருள் சொல்லில் கதை

(2 - 63)

இந்தப் பாடலின் மூலம் பொய்கையாழ்வாரைப் போலவே பூதத்தாழ்வாரும் சிவபெருமான் பிரம்ம சாபம் நீங்கிய விவரம் பற்றி இங்கே தமது இரண்டாந் திருவந்தாதியில் 63வது பாடலில் விவரிக்கிறார்.

நப்பின்னையை மணம் புரிய வேண்டிப் பணயம் வைத்த ஏழு எருதுகளையும் - வென்ற திறத்த எந்தை கண்ணபெருமான் -

தீயுருவனும் - காளை வாகனனும் ஆன சிவபெருமான் அனுபவித்த - சகலரும் கைவிட்டு விடும்படியான சாபத்தைப் போக்குவதற்காகக் கழுகுகள் ஏறியிருந்து சாப்பிடுவதற்குரிய கபாலவாய் நிறையும் படியாகக் குவிந்த எழிலுடைய திருக்கரத்தாலே மார்பைக் கீறி

எடுத்து நிரப்பிய ரத்தத்தாலே அப்பிரம்ம கபாலம் கையினின்று கழன்று கீழே விழும் நிலையைப் பார்த்த செயலைப் பற்றிக் கூறத் தொடங்கினால் அது ஒரு பெரிய கதையாகவே முடியும் எனக் கதையைக் கூறியிருக்கிறார்.

ஓம் சாந்தி : ஓம் சாந்தி: ஓம் சாந்தி :

|| ஓம் ||



ஸ்ரீ :

# பைரவரின் ஆராதனையும் - உபாஸனையும்

## பொது ஆராதனை

நாம் அன்றாடம் ஆலயம் சென்று அங்குள்ள பைரவரை வணங்கி வழிபட்டு ஆராதனையும் - உபாஸனையும் செய்ய வேண்டும். ஸ்தோத்ரங்களையும் சொல்ல வேண்டும். இது சாதாரணமான செயல்தான். ஆனால் ஸ்ரீ பைரவ தேவனின் உபாஸனையையோ - யந்த்ர மந்த்ர ஸாதனையையோ ஸித்தியையோ பெறமுயல்வது மானஸீகமான செயல்முறை.

பூஜையையோ - அர்ச்சனையையோ செய்யலாம். ஆனால் விதிமுறைப்படி ஆராதனையையும் - உபாஸனையையும் செய்யும்போது பைரவரின் உருவச் சிலையையோ - படத்தையோ - இப்படி ஏதாவது ஒரு அடையாளத்தை வைத்துக் கொண்டு செய்வது மிகவும் முக்கியம். இதனால் பைரவ தேவர் நேரடியாக இருப்பதாக ஐதீகம். சிலையாகவோ விக்ரஹமாகவோ

இருக்கும் பக்ஷத்தில் அதைக் குளிப்பாட்டி - ஆடை அணிவித்து - அழகு செய்து - தூபம் - தீபம் காட்டி நைவேத்யமும் படைத்து - கற்பூர ஆரத்தியும் இவை முதலானவைகளை வெளிப்படையாகச் செய்யலாம். ஸ்நானம் அந்த உருவத்திற்குச் செய்வதாக இருந்தால் அதற்கு மந்த்ரம் சொல்லிச் சுத்த ஜலம் - பால் - தயிர் - பஞ்சாம்ருதம் ஆகியவற்றால் செய்யலாம். அதன் பின்பு ஆடை அலங்காரம் செய்து - சந்தனம் - மலர்கள் - அக்ஷதைகளைச் சேர்க்க வேண்டும். கடைசியில் நைவேத்யமும் படைத்துப் பக்த ஜனங்களோடு கூட இருந்து கற்பூர ஆரத்தி எடுத்துப் பூஜை ஆராதனையை முடிக்கலாம்.

## உபாஸனை முறை

ஒரு ஸாதகர் தாம் உபாஸனையைச் செய்ய ஆலயம் சென்றாலோ அங்குச் சிறப்பானதொரு இடத்தைத் தேட வேண்டிய அவசியம் இல்லை. எங்குப் போய்ச் செய்தாலும் அது மிகவும் அமைதியான (சாந்தமான) இடமாக உள்ளதா என்று பார்த்துச் - சாந்தமான உள்ளத்தோடு இருந்து - அமர்ந்து பைரவ தேவரை உபாஸனை செய்ய வேண்டும். ஆரம்ப காலத்தில் ஒரு சிலர் பைரவரை உபாஸனை செய்கிற ஆலயத்தில் தங்களுடைய முகத்திற்கு எதிரே அவரது சிலையையோ - விக்ரஹத்தையோ - படத்தையோ ஞாபகத்திற்காக வைத்துக் கொண்டும் செயல்படுவதைக் காணலாம். இப்படி வைத்துச் செயல்படுவது நம் மனத்தில் அதே நினைப்பு வருவதற்குத்தான் அப்படி வைத்துக் கொள்கிறார்கள். இவ்வாறே சில நாட்கள் தொடர்ந்து உபாஸனையில் ஈடுபட்டு வந்தால் நாளடைவில் போகப் போக உருவமே ஏதும் இல்லாமலேயே உபாஸிக்கக் கூடிய நிலை ஏற்படும். அப்போது பைரவ நாதர் நம் மனம் - மொழி - மெய்களில் கலந்திருப்பதாக ஓர் உணர்ச்சி ஏற்படும். இப்படியிருக்கும் காலத்தில்

விதிமுறை வழுவாமல் த்யானம் செய்யக்கூடிய சந்தர்ப்பத்தில் அந்தப் பகவான் பைரவ தேவர் நம்முடைய எதிரிலேயே இருப்பதாகத் தெரியவரும். பிறகு இங்குக் கூறப்பட்ட மந்திரங்களை உச்சரித்து - ஜபித்து - வருவோமேயானால் இந்தப் பகவான் பைரவ தேவரின் உபாஸனை முறை பூர்ணமாகும் என்பதை அறியவும்.

அநேகமாகக் கோயிலுக்குச் செல்பவர்கள் இப்படி ஆராதனையையோ - த்யானத்தையோ - உபாஸனை யையோ வேறு எதையும் செய்வதில்லை. கோயிலுக்கு வருவார்கள். ஏதோ ஸ்வாமியைக் கைகுவித்து வணங்கு வார்கள். சிலர் அர்ச்சனை செய்யச் சொல்வார்கள். பிரஸாதம் - குங்குமம் முதலியவை பெற்றுத் திரும்பு வார்கள். ஆனால் அங்குள்ள பூசாரியோ முறைப்படி முதலிலேயே யாவற்றையும் செய்திட வேண்டும்.

நாம் பூர்ணமாகப் பைரவ தேவரை விதி வழுவாமல் ஆராதனை செய்யலாம். அல்லது மானஸீகமாக உபாஸனையைச் செய்யலாம். அல்லது அப்பைரவரின் பல நாமாக்களைச் சொல்லியோ - ஒரு நாமாவைச் சொல்லியோ - ஜபமும் செய்யலாம். இவற்றை யெல்லாம் செய்கிறபோது சுசிருசியாகக் குளித்து மடியுடுத்தி - நெற்றியில் சின்னம் அணிந்து - சுத்தமான அமைதியான இடத்தைத் தேர்ந்தெடுத்து - அமர்ந்து - சாந்த உள்ளத்தோடு நல்ல உச்சரிப்பு மாறாமல் மந்த்ரங்களைச் சொல்லி ஒவ்வொரு செயலையும் பூர்த்தி செய்து வந்தால் - மந்த்ரஸித்தி ஏற்பட வாய்ப்புண்டு. இதற்குப் பிரம்மசர்ய விரதத்தைக் கடைப்பிடித்து உடலைத் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். மனத்தை அலைபாய விடக்கூடாது. பயம் தவிர்க்க வேண்டும் - துணிவும் - தைரியமும் உடன்

இருக்கவேண்டும். கவலை தளர்ச்சி கொள்ளக் கூடாது. முழு நம்பிக்கையோடு பைரவதேவரை த்யானிக்க வேண்டும்.

### இனி பூஜை முறைகள்

## சாந்தி பாடம்

### கோஷ சாந்தி:

சந்நோ வாத: பவதாம் மாதரிச்வா சந்நஸ்தபது ஸூர்ய: । அஹானி சம்பவந்துந: சகும் ராத்ரி: ப்ரதி தீயதாம்। சமுஷாநோவ்யுச்சது சமாதித்ய உதேது ந: । சிவாந: சந்தமா பவ ஸும்ருடீகா ஸரஸ்வதி । மா தே வ்யோம ஸந்த்ருசி இடாயை வாஸ்த்வஸி வாஸ்து மத்வாஸ்து மந்தோ பூயாஸ்ம மா வாஸ்தோ: ச்சித்ஸ் மஹ்யவாஸ்து: ஸபூயாத்யோ அஸ்மான் த்வேஷ்டியஞ்ச வயந் த்விஷ்ம: । ப்ரதிஷ்ட்டாஅஸி ப்ரதிஷ்ட்டா வந்தோ பூயாஸ்ம மா ப்ரதிஷ்ட்டாயா: ச்சித்ஸ்மஹ்ய ப்ரதிஷ்ட்ட : ஸ பூயாத்யோ அஸ்மான் த்வேஷ்டி யஞ்ச வயந் த்விஷ்ம : । ஆவாதவாஹி பேஷஜம் விவாதவாஹி யத்ரப: । த்வகும்ஹி விச்வ பேஷஜோ தேவனாந்தூத ஈயஸே த்வா விமௌ வாதௌ வாத ஆஸிந்த் தோராபராவத: । (1)

தக்ஷம் மே அன்ய ஆவாது பாரஅன் யோவாது யத்ரப: । யத் தோவாத தே க்ருஹேஅம்ருதஸ்ய நிதிர் ஹித: । ததோ நோ தேஹி ஜீவஸேததோ நோ தேஹி பேஷஜம் । ததோ நோ மஹ ஆவஹ வாத ஆவாது பேஷஜம் । சம்ப்பூர் மயோ பூர்நோஹ்ருதே ப்ரண ஆயூகும் ஷி தாரிஷத் । இந்த்ரஸ்ய க்ருஹோ அஸி தந்த்வா ப்ரபத்யே ஸகுஸ்ஸாச்வ: । ஸஹ யன்மே அஸ்திதேன । பூ: ப்ரபத்யே புவ : ப்ரபத்யே ஸுவ : ப்ரபத்யே பூர்ப்புவஸ்ஸுவ : ப்ரபத்யே வாயும் ப்ரபத்யே அநார்த்தாந் தேவதாம் ப்ரபத்யே அச்மான மாசுணம் ப்ரபத்யே ப்ரஜாபதேர் ப்ரஹ்ம கோசம் ப்ரஹ்ம ப்ரபத்ய ஓம் ப்ரபத்யே।

அந்தரிக்ஷம் ம உர்வந்தரம் ப்ருஹதக்னய : பர்வதாச்ச யயா வாத: ஸ்வஸ்த்யா ஸ்வஸ்திமாந்தயா ஸ்வஸ்த்யா ஸ்வஸ்திமானஸானி । ப்ராணாபாநௌ ம்ருத்யோர் மா பாதம் ப்ராணாபாநௌ மா மா ஹாஸிஷ்டம் மயி மேதாம் மயி ப்ரஜாம் மய்யக் னிஸ் தேஜோ ததாது மயிமேதாம் மயி ப்ரஜாம் மயீந்த்ர இந் த்ரியந் ததாது மயி மேதாம் மயி ப்ரஜாம் மயி ஸூர்யோ ப்ராஜோ ததாது । (2)

த்யுபிரக்துபி : பரிபாத மஸ்மா நரிஷ்டே பிரச்வினா ஸௌ பகபேி:। தந்நோ மித்ரோ வருணோ மா மஹந்தா மதிதிஸ்ஸிந்த்து: ப்ருதிவீ உதத்யௌ:। கயாநச்சித்ர ஆபுவ தூதீ ஸதா வ்ருதஸ்ஸகா। கயாசசிஷ்ட்டயா வ்ருதா। கஸ்த்வா ஸத்யோ மதானாம் மஹிஷ்ட்டோ மத்ஸதந்த்தஸ:। த்ருடா சிதாருஜேவஸூ । அபீஷூணஸ் ஸகீனா மவிதாஜரித்ரூணாம் சதம் பவாஸ் யூதிபி : வய : ஸூபர்ணா உபஸேதுரிந்த்ரம் ப்ரிய மேதா ருஷயோ நாதமானா: । அபத்த்வாந்த் மூர்ணு ஹி பூர்த்தி சக்ஷூர் முமுக்த்யஸ்மாந் நித்யேவ பத்தான் । (3)

சந்நோ தேவீரபிஷ்டய ஆபோ பவந்து பீதயே । சம்யோர பிஸ்ரவந்து ந : । ஈசானா வார்யாணாம் க்ஷயந்தீச்சர்ஷணீனாம் அபோ யாசாமிபேஷஜம் । ஸூமித்ரா ந ஆப ஓஷதய: ஸந்து துர்மித்ராஸ் தஸ்மை பூயாஸூர்யோஅஸ்மான் த்வேஷ்டி யஞ்ச வயந்த்விஷ்ம: । ஆபோ ஹிஷ்ட்டா மயோ புவஸ் தாந ஊர்ஜே ததாதந । மஹேரணாய சக்ஷயே । யோவ: சிவதமோ ரஸஸ்தஸ்ய பாஜயதேஹ ந: । உசதீரிவ மாதர: । தஸ்மா அரங்கமா மவோ யஸ்ய க்ஷயாய ஜின்வத । (4)

ஆபோ ஜனயதா ச ந: । ப்ருதிவீ சாந்தா ஸாஅக்னினா சாந்தா ஸாமே சாந்தா கசகும் சமயது । அந்தரிக்ஷகும் சாந்தந் தத் வாயுனா சாந்தந் தன்மே சாந்தகும் கசகும் சமயது । த்யௌ: சாந்தா ஸாஆதித்யேன சாந்தா ஸா மே சாந்தா கசகும் சமயது। ப்ருதிவீ சாந்தி ரந்தரிக்ஷகும் சாந்திர் த்யௌ: சாந்திர் திச: சாந்தி : - ரவாந்தர திசா : சாந்தி: - அக்னி : சாந்திர் வாயு:

சாந்தி ராதித்ய: சாந்திச் சந்த்ரமா: சாந்திர் - நக்ஷத்ராணி சாந்தி - ராப: சாந்தி - ரோஷதய: சாந்திர் - வனஸ்பதய: சாந்திர் - கௌ : சாந்தி: - ராஜா சாந்திர் ரச்வ : சாந்தி : புருஷ: சாந்திர் ப்ரஹ்ம சாந்தி: ப்ராஹ் மண: சாந்தி: சாந்திரேவ சாந்தி: சாந்திர் மேஅஸ்து சாந்தி: । தயா அஹகும் சாந்த்யா ஸர்வ சாந்த்யா மஹ்யந் த்விபதே சதுஷ்பதே ச சாந்திங் கரோமி சாந்திர் மே அஸ்து சாந்தி: । ஸஹ ஸ்ரீச்ச ஹ்ரீச்ச த்த்ருதிச்ச தபோ மேதா ப்ரதிஷ்ட்டா ச்ரத்தா ஸத்யந் தர்மச் சைதானி மோத்திஷ்ட்டந்த - மனூத்திஷ்ட்டந்து மாமா: ஸ்ரீச்ச ஹ்ரீச்ச தத்ருதிச்ச தபோ மேதா ப்ரதிஷ்ட்டாச்ரத்தா ஸ்த்யத் தர்மச் சைதானி மாமா ஹாஸிஷு: உதாயுஷா ஸ்வாயுஷா தோஷதீனாகும் ரஸேனோத் பர்ஜன்யஸ்யசுஷ்மேணோதஸ் த்தா மம்ருதாகும் அனு । தச்சக்ஷர் தேவ ஹிதம் புரஸ்தாச் சுக்ரமுச்சரத் । பச்யேம சரத: சதஞ் ஜீவேம சரத: சதந் நந்தாம சரத: சதம் மோதாம சரத: சதம் பவாம சரத: சதம் ச்ருண வாம சரத: சதம் ப்ரப்ரவாம சரத: சதமஜீதாஸ்யாம சரத: சதஞ் ஜ்யோக்ச ஸூர்யந் த்ருசே ॥ (5)

ய உதகான் மஹதோர்ணவாத் விப்ராஜ மானஸ் சரிரஸ்ய மத்த்யாத் ஸமாவ்ருஷபோ லோஹிதாக்ஷ: ஸூர்யோ விபச் சின்மனஸா புனாது । ப்ரஹ்மண ச்சோதன்யஸி ப்ரஹ்மண ஆணீ ஸ்த்தோ ப்ரஹ்மண ஆவபன மஸி தாரிதேயம் ப்ருதிவீ ப்ரஹ்மணா மஹீ தாரிதமேநேந மஹதந்தரிக்ஷந் திவந்தாதார ப்ருதிவீகும் ஸதேவாந் யதஹம் வேத ததஹந் தாரயாணி மாமத் வேதோ அதிவிஸ்ரஸத் । மேதா மனீஷே மாவிசதாகும் ஸமீசீ பூதஸ்ய பவ்யஸ்யாவருத்த்யை ஸர்வ மாயுரயாணி ஸர்வ மாயுர யாணி ।

ஆபிர்க்கீர்ப்பிர் யததோ ந ஊன மாப்யாயய ஹரிவோ வர்த்தமான: யதா ஸ்தோத்ருப்பயோ மஹி கோத்ராருஜாஸி பூயிஷ்ட்ட பாஜோ அத தே ஸ்யாம । ப்ரஹ்ம ப்ராவதிஷ்ம தந்நோ மாஹாஸீத் ।

ஓம் சாந்தி : சாந்தி: சாந்தி: ॥

கோஷ சாந்தி நிறைவு பெற்றது.

இனி விநாயக பூஜை

ஓம் – ஸ்ரீரஸ்து

## முதலில் ஸ்ரீ விநாயக பூஜை :

(நாம் எந்த ஒரு பூஜையையும் தொடங்குவதற்கு முன்னர், அந்தப் பூஜை எந்தவிதத் தட்டுத்தடங்கலும் இன்றி இனிதாக நிறைவேற; வினைகளையெல்லாம் தீர்த்து நன்மை அளிக்கும் 'வக்ரதுண்டன், விக்கினம் தவிர்க்கும் விக்கின விநாயகன், கஜமுகன், கணநாயகன், ஆறுதலளித்துக் காக்கும் ஆனை முகத்தான்' அவன் தன் திருவடி மலர்த்தாள்களை வேண்டியபடி தொடங்கிட வேண்டும்.)

## பூர்வாங்க பூஜை (முதல் பகுதி பூஜை)

(ஆசமனம்) (மந்த்ரம் ஒவ்வொன்றையும் சொல்லும் போது உள்ளங்கையிலே தீர்த்தம் (நீர்) கொஞ்சம் எடுத்துக் கொண்டு சாப்பிடவும்.)

**மந்த்ரம்**

ஓம் அச்யுதாயநமஹ! ஓம் அநந்தாய நமஹ!
ஓம் கோவிந்தாய நமஹ!

## அங்க வந்தனம் (உறுப்புகளுக்கு வணக்கம்)

(மந்த்ரங்களை ஒவ்வொன்றாகச் சொல்லும்போது குறிப்பிட்ட உறுப்புகளிலே கைவிரல்களை வைக்கவும்.)

**மந்த்ரம்**

ஓம் கேசவாய நமஹ (வலது கைக் கட்டை விரலால்) வலது கன்னத்தில் தொடவும்.

ஓம் நாராயணாய நமஹ (வலது கைக் கட்டை விரலால்) இடது கன்னத்தில் தொடவும்.

ஓம் மாதவாய நமஹ (மோதிர விரலால்) வலது கண்ணைத் தொடவும்.

ஓம் கோவிந்தாய நமஹ (மோதிர விரலால்) இடது கண்ணைத் தொடவும்.

ஓம் விஷ்ணவே நமஹ (ஆள்காட்டி விரலால்) வலது மூக்கைத் தொடவும்.

ஓம் மதுஸூதனாய நமஹ (ஆள் காட்டி விரலால்) இடது மூக்கைத் தொடவும்.

ஓம் த்ரிவிக்ரமாய நமஹ (சுண்டு விரலால்) வலது காதைத் தொடவும்.

ஓம் வாமனாய நமஹ (சுண்டு விரலால்) இடது காதைத் தொடவும்.

ஓம் ஸ்ரீதராய நமஹ (பெரு விரலால்) வலது தோளைத் தொடவும்.

ஓம் ஹ்ருஷீகேசாய நமஹ (பெரு விரலால்) இடது தோளைத் தொடவும்.

ஓம் பத்ம நாபாய நமஹ (கட்டை விரலால்) தொப்புளைத் தொடவும்.

ஓம் தாமோதராய நமஹ (எல்லா விரல்களாலும்) உச்சந்தலையைத் தொடவும்.

## ஸ்ரீ விநாயகர் த்யானம்

(புஷ்பம் – அக்ஷதை இவற்றைக் கையிலே எடுத்துக் கொண்டு நெற்றிப் புறந்தலையிலே இருகைகளையும்

மூடியபடி, மந்த்ரம் சொல்லியவாறே மும்முறை குட்டிக் கொள்ளவும்.)

**மந்த்ரம்**

சுக்லாம் பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம்।
ப்ரஸன்னவதனம் த்யாயேத் ஸர்வ விக்ன உபசாந்தயே॥
வக்ரதுண்ட மஹாகாய கோடிஸூர்ய ஸமப்ரப।
அவிக்னம் குரு மே தேவ ஸர்வகார்யேஷு ஸர்வதா॥

(ஸ்ரீ விஷ்ணுவின் திருவடித் தாமரைகளையும் த்யானிக்கவும்.)

**மந்த்ரம்**

தேவ லக்னம் ஸுதினம் ததேவ
தாராபலம் சந்த்ர பலம் ததேவ।
வித்யாபலம் தைவ பலம் ததேவ
லக்ஷ்மீபதே தே அங்க்ரியுகம் ஸ்மராமி॥

**ப்ராணாயாமம் (மூச்சடக்கல்)**

(வலது கையின் மோதிர விரல், சுண்டுவிரல் இவைகளாலே இடது புற நாசித்வாரத்தை அடைத்துக் கொண்டு, வலது மூக்கால் உள் காற்றை வெளியே விட்டு, நாசித்வாரத்தை வலது கைக்கட்டை விரலால் மூடியபடி, இடது பக்கத்தால் காற்றை உள்ளுக்கு இழுத்துப் பிறகு இரு துவாரங்களையும் அழுத்தி மூடியபடி, இறைவனை வேண்டி த்யானம் செய்தபடி மந்த்ரத்தைச் சொல்லவும்.)

**மந்த்ரம்**

ஓம் பூ:, ஓம் புவ:, ஓகும்ஸுவ:, ஓம் மஹ:,
ஓம் ஜன:, ஓம் தப:, ஓகும்ஸத்யம், ஓம் தத் ஸவிதுர்–
வரேண்யம், பர்க்கோ தேவஸ்ய தீமஹி,

தியோ யோ ந: ப்ரசோதயாத்,
ஓமாப:, ஜ்யோதீரஸ:, அம்ருதம் ப்ரஹ்ம,
பூர்ப்புவவுஸ் ஸுவரோம், ஓம் ஓம் ஓம்॥

*(வலது காதைத் தொடவும்.)*

## ஸங்கல்பம் (உறுதி செய்தல்)

*(இடது புறக் கையை வலப்பக்கத் தொடையின் மீது நிமிர்த்தி வைத்துக் கொண்டு, புஷ்பம், அக்ஷதை இவற்றைக் கையில் வைத்துக் கொண்டு, வலதுபுற உள்ளங்கையாலே மூடிய வண்ணம் மந்த்ரம் சொல்லவும்.)*

### மந்த்ரம்

மம உபாத்தஸமஸ்த துரித க்ஷய த்வாரா
ஸ்ரீபரமேச்வரப்ரீத்யர்த்தம், கரிஷ்யமாணஸ்ய
கர்மண: நிர்விக்னேன பரிஸமாப்த்யர்த்தம்,
ஆதௌவிக்னேச்வர பூஜாம் கரிஷ்யே॥

*(என்று சொன்ன பின் கையில் உள்ள புஷ்பம் – அக்ஷதை இவற்றை வடக்குப்புறமாகப் போடவும். தண்ணீரால் கைகளைச் சுத்தம் செய்து கொள்ளவும்.)*

## ஆஸன பூஜை (இருக்கை)

### மந்த்ரம்

ப்ருதிவ்யா: மேருப்ருஷ்ட்டருஷி:
(வலக்கை விரலாலே தலையைத் தொடவும்.)
ஸுதலம்ச்சந்த: (மூக்கைத் தொடவும்.)
கூர்மோதேவதா (மார்பைத் தொடவும்.)
ஸர்வத்ர ஆஸனே விநியோக: (இனி இருக்கைப் பலகையைப் பிடித்தபடியே மந்த்ரம் சொல்லவும்.)

ப்ருதிவீ த்வயா த்ருதா லோகா:
தேவி த்வம் விஷ்ணுனா த்ருதா।
த்வம் ச தாரய மாம் தேவி
பவித்ரம் குரு ச ஆஸனம்॥

## கண்டா (மணி) பூஜை

*(மந்த்ரம் சொல்லியபடியே மணியை அடிக்கவும்.)*

### மந்த்ரம்

ஆகமார்த்தம் து தேவானாம்
கமனார்த்தம் து ரக்ஷஸாம்।
கண்டா ரவம் கரோம்யாதௌ
தேவதா ஆஹ்வான லாஞ்ச்சனம்॥

(மணி அடித்தலை நிறுத்தவும்)

## ஸ்ரீ விநாயக பூஜை

*(மஞ்சற் பொடியை எடுத்து, நீரைச் சேர்த்துக் கலந்து, பிள்ளையாரைப் பிடித்து வைக்கவும். சிலர் பிள்ளையார் சிலையை (சிறிய) வைத்துக் கொள்வர். பிறகு புஷ்பம், அக்ஷதை இவற்றைக் கையிலே எடுத்துக் கொண்டு மந்த்ரம் சொல்லவும்.)*

### மந்த்ரம்

### த்யானம் - ஆவாஹனம்

**(வேண்டல் - உயிரூட்டல்)**

**கணானாம்த்வா கணபதிகும் ஹவாமஹே।**
**கவிம் கவீனாம் உபம ச்ரவஸ்தமம்।**
**ஜ்யேஷ்ட்டராஜம் ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்பதே।**
**ஆந: ச்ருண்வன் ஊதிபி: ஸீதஸாதனம்॥**

கஜானனம் பூத கணாதிஸேவிதம்
கபித்த ஜம்பூ பலஸார பக்ஷிதம்॥
உமாஸுதம் சோக விநாச காரணம்
நமாமி விக்னேச்வர பாதபங்கஜம்॥

அகஜானன பத்மார்க்கம் கஜானனம் அஹர்நிசம்।
அநேகதம் தம் பக்தானாம் ஏகதந்தம் உபாஸ்மஹே॥

வக்ர துண்ட மஹா காய
　　கோடிஸூர்ய ஸம்ப்ரப।
அவிக்னம் குரு மே தேவ
　　ஸர்வ கார்யேஷு ஸர்வதா॥

மூஷிகவாஹன மோதகஹஸ்த
　　சாமர கர்ண விலம்பித ஸூத்ர।
வாமனரூப மஹேச்வர புத்ர
　　விக்ன விநாயக பாத நமஸ்தே॥

முதாகராத்த மோதகம் ஸதா விமுக்திஸாதகம்
கலாதராவதம்ஸகம் விலாசிலோகரக்ஷகம்॥
அநாயக ஏக நாயகம் விநாசித இபதைத்யகம்
நதாசுபாசு நாசகம் நமாமி தம் விநாயகம்॥

அஸ்மின் ஹரித்ராபிம்பே ஸபரிவாரம், ஸுமுகம்,
மஹாகணபதிம் ஸ்ரீவிநாயகம் த்யாயாமி,
ஆவாஹயாமி।

*(என இவ்வாறு சொல்லி, புஷ்பம், அக்ஷதை இவற்றை அங்கு வைத்துள்ள மஞ்சள் பிள்ளையார் - சிலைப் பிள்ளையார் மீது சேர்க்கவும்.)*

# உபசார பூஜை (மரியாதை முறை)

## மந்த்ரம்

ஸ்ரீ விநாயகாய நம : ஆஸனம் ஸமர்ப்பயாமி (புஷ்பத்தைப் போடவும்.)

ஸ்ரீ விநாயகாய நம : அர்க்யம் ஸமர்ப்பயாமி (சிறு கரண்டியாலே தண்ணீர் எடுத்து ஒரு கிண்ணத்தில் சேர்க்கவும்.)

ஸ்ரீ விநாயகாய நம : பாத்யம் ஸமர்ப்பயாமி (சிறு கரண்டியாலே தண்ணீர் எடுத்து ஒரு கிண்ணத்தில் சேர்க்கவும்.)

ஸ்ரீ விநாயகாய நம : ஆசமனீயம் ஸமர்ப்பயாமி (சிறு கரண்டியாலே மூன்று தடவை தண்ணீர் எடுத்து ஒரு கிண்ணத்தில் சேர்க்கவும்.)

ஸ்ரீ விநாயகாய நம : ஔபசாரிக ஸ்நானம் ஸமர்ப்பயாமி (சிறு கரண்டியாலே தண்ணீர் எடுத்துத் தெளிக்கவும்.)

ஸ்ரீ விநாயகாய நம : ஸ்நான அனந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி (சிறு கரண்டியாலே தண்ணீர் மூன்று தடவை எடுத்துக் கிண்ணத்திலே சேர்க்கவும்.)

ஸ்ரீ விநாயகாய நம : வஸ்த்ரார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி (பிள்ளையார் மேல் அக்ஷதை போடவும்.)

ஸ்ரீ விநாயகாய நம : யஜ்ஞோபவீதார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி (பிள்ளையார் மேல் அக்ஷதையைப் போடவும்.)

ஸ்ரீ விநாயகாய நம : கந்தான் தாரயாமி
(சந்தனம் எடுத்துத் தெளிக்கவும்.)

ஸ்ரீ விநாயகாய நம : கந்தஸ்ய உபரி அக்ஷதான் ஸமர்ப்பயாமி (அக்ஷதை போடவும்.)

ஸ்ரீ விநாயகாய நம : ஹரித்ரா குங்குமம் ஸமர்ப்பயாமி
(குங்குமம் போடவும்.)

ஸ்ரீ விநாயகாய நம : புஷ்பை: அக்ஷதைச்ச பூஜயாமி

*(இனி மந்த்ரங்களைச் சொல்லிச் சொல்லி புஷ்பம், அக்ஷதை இவற்றைக் கொண்டு அர்ச்சனை செய்யவும்.)*

## அர்ச்சனை

### மந்த்ரம்

ஓம் ஸுமுகாய நமஹ, ஓம் ஏகதந்தாய நமஹ,
ஓம் கபிலாய நமஹ, ஓம் கஜகர்ணகாய நமஹ,
ஓம் லம்போதராய நமஹ, ஓம் விகடாய நமஹ,
ஓம் விக்ன ராஜாய நமஹ, ஓம் விநாயகாய நமஹ,
ஓம் தூம கேதவே நமஹ, ஓம் கணாத்யக்ஷாய நமஹ,
ஓம் பாலசந்த்ராய நமஹ, ஓம் கஜானனாய நமஹ,
ஓம் வக்ர துண்டாய நமஹ, ஓம் சூர்ப்பகர்ணாய நமஹ,
ஓம் ஹேரம்பாய நமஹ, ஓம் ஸ்கந்த பூர்வ ஜாய நமஹ,
ஓம் மஹா கணாதிபதயே நமஹ ஓம்॥
நானாவித பத்ர பரிமள புஷ்பாணி ஸமர்ப்பயாமி॥

(புஷ்பங்களையும் – அக்ஷதையையும் போடவும்.)

# உபசார பூஜைத் தொடர்

### மந்த்ரம்

ஸ்ரீ விநாயகாய நமஹ தூபம் ஆக்ராபயாமி
(சாம்ப்ராணி தூபம் காட்டவும்.)

ஸ்ரீ விநாயகாய நமஹ தீபம் தர்சயாமி
(விளக்கை ஏற்றிக் காட்டவும்.)

ஸ்ரீ விநாயகாய நமஹ நைவேத்யம் நிவேதயாமி

(வாழைப்பழம், வெற்றிலை – பாக்கு, வெல்லம், தேங்காய் இவற்றைத் தட்டில் வைத்துப் பிள்ளையாருக்கு மந்த்ரத்தைச் சொல்லியபடியே மணி அடித்தவண்ணம் காட்ட வேண்டும்.)

### மந்த்ரம்

ஓம் பூர்ப்புவஸ்ஸுவ:। ஓம் தத் ஸவிதுர் வரேண்யம்।

பர்க்கோ தேவஸ்ய தீமஹி। தியோ யோந: ப்ரசோதயாத்।

தேவ ஸவிது: ப்ரஸுவ।

(இம்மந்த்ரத்தை இவ்வாறு சொல்லிச் சிறு கரண்டியிலே தண்ணீரை எடுத்துக் கொண்டு ஸ்வாமிக்குக் காட்ட வேண்டிய பொருள்களின் மேல் தெளிக்கவும். பிறகு;)

### மந்த்ரம்

ஸத்யம் து அர்த்தேன பரிஷிஞ்சாமி। (தண்ணீரைச் சிறு கரண்டியிலே எடுத்து வைத்திருக்கும் பொருள்களை வலமாகச் சுற்றி விடவும்.)

### மந்த்ரம்

அம்ருதம் அஸ்து! அம்ருத உபஸ்தரணம் அஸி!

(தண்ணீரைச் சிறு கரண்டியில் எடுத்துக் கிண்ணத்திலே சேர்க்கவும். பிறகு அந்தப் பொருள்களைக் கையால் காட்டியபடி மந்த்ரம் சொல்லிப் படைக்க வேண்டும்.)

### மந்த்ரம்

ஓம் ப்ராணாயஸ்வாஹா! ஓம் அபானாயஸ்வாஹா!
ஓம் வ்யானாயஸ்வாஹா! ஓம் உதானாயஸ்வாஹா!
ஓம் ஸமானாயஸ்வாஹா! ஓம் ப்ரஹ்மணேஸ்வாஹா!
ப்ரஹ்மணிம ஆத்மா அம்ருதத்வாய!!
ஸ்ரீ விநாயகாயநம:– கதளீபலம், தாம்பூலம்,
நாரிகேள கண்ட த்வயம் மஹா நைவேத்யம்
நிவேதயாமி!! மத்யே மத்யே பாநீயம்
ஸமர்ப்பயாமி!!

(தண்ணீரைச் சிறு கரண்டியிலே எடுத்துக் கிண்ணத்திலே சேர்க்கவும்.)

### மந்த்ரம்

அம்ருதாபிதாநமஸி! உத்தரா போசனம்

ஸமர்ப்பயாமி!! (தண்ணீரைச் சிறு கரண்டியிலே எடுத்து கிண்ணத்திலே சேர்க்கவும்.)

### மந்த்ரம்

நைவேத்யானந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி!

(தண்ணீரைச் சிறு கரண்டியிலே எடுத்து மூன்று தடவை கிண்ணத்திலே சேர்க்கவும்.)

ஸ்ரீ விநாயகாய நம : தாம்பூலம் ஸமர்ப்பயாமி!

(தண்ணீரை எடுத்து வெற்றிலையிலே தெளித்துக் காட்டவும்.)

ஸ்ரீ விநாயகாய நம : கற்பூர நீராஜனம் ஸமர்ப்பயாமி।

(கற்பூர தீபம் ஏற்றிக் காட்டவும்.)

நீராஜனானந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி।

(தண்ணீரைச் சிறு கரண்டியாலே மூன்று தடவை எடுத்துக் கிண்ணத்திலே சேர்க்கவும்.)

ஸ்ரீ விநாயகாயநம : ஸமஸ்த உபசாரபூஜாம் ஸமர்ப்பயாமி

(அங்குள்ள மஞ்சள் - சிலைப் பிள்ளையார் மேலே அக்ஷதையைப் போடவும்.)

## ப்ரார்த்தனை (வேண்டல்)

### மந்த்ரம்

வக்ர துண்ட மஹா காய ஸூர்ய கோடி ஸமப்ரப।
அவிக்னம் குரு மே தேவ ஸர்வகார்யேஷு ஸர்வதா॥

அபீப்ஸிதார்த்த ஸித்த்யர்த்தம் பூஜிதோ(அ)யம் ஸுரைரபி।
ஸர்வவிக்னச்சிதே தஸ்மை கணாதிபதயே நம:॥

அகஜானன பத்மார்க்கம் கஜானனம் அஹர்நிசம்।
அநேகதம் தம் பக்தானாம் ஏகதந்தம் உபாஸ்மஹே॥

கஜானனம் பூத கணாதி ஸேவிதம்
கபித்த ஜம்பூ பல ஸார பக்ஷிதம்।
உமாஸுதம் சோகவிநாச காரணம்
நமாமி விக்னேச்வர பாத பங்கஜம்॥

யாநி காநி ச பாபாநி ஜன்மாந்தர க்ருதானி ச।
தாநி தாநி விநச்யந்தி ப்ரதக்ஷிண பதே பதே॥

(இவ்வாறு வேண்டித் துதித்தபடியே வலம் வரவும். கும்பிடவும் வேண்டும்.)

(பூர்வாங்க பூஜை நிறைவு பெற்றது.)

ஓம் சாந்தி: ஓம் சாந்தி: ஓம் சாந்தி:

॥ ஓம் ॥

ஸ்ரீ

## ஸ்ரீ கணபதி த்யானம்

கையில் புஷ்பம் அக்ஷதை வைத்துக்கொண்டு நெற்றிப்பக்கம் இருபுறத் தலையிலும் 3 முறை குட்டிய வண்ணம் மந்த்ரம் சொல்லவும்.

சுக்லாம் பரதாம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம் ।
ப்ரஸன்னவதனம் த்யாயேத்ஸர்வ விக்ன உபசாந்தயே ॥
ப்ராண ஆயாமம் (மூச்சடக்கல்) (முன்போல் செய்யவும்)

### மந்த்ரம்

ஓம் பூ: ஓம் புவ: ஓகும் ஸுவ: ஓம்மஹ: ஓம்ஜன:
ஓம் தப: ஓம்கும்ஸத்யம், ஓம் தத்ஸவிதுர் வரேண்யம்,
பர்க்கோ தேவஸ்யதீமஹி, தியோ யோந:, ப்ரசோத்யாத்
ஓமாப:, ஜ்யோதீரஸ:, அம்ருதம் ப்ரஹ்மபூர்ப்புவஸ்
ஸுவரோம் ஓம் ஓம் வலது காதைத் தொடவும்.

## ஸ்ரீ பைரவபூஜா ஸங்கல்பம்

### மந்த்ரம்

வலது பக்கத் தொடை மீது இடதுகையை நிமிர வைத்துப் புஷ்பாக்ஷதைகளை வைத்துக் கொண்டு வலது உள்ளங்கையால் மூடியபடி மந்த்ரம் சொல்லவும்.

ஓம் அஸ்ய ஸ்ரீபகவத: மஹா புருஷஸ்ய விஷ்ணோராஜ்ஞயா

ப்ரவர்த்தமானஸ்ய - ஆத்யப்ரஹ்மண: - த்விதீய
பரார்த்தே - ஸ்ரீச்வேதவராஹகல்பே - வைவஸ்வத
மன்வந்த்ரே - அஷ்டாவிகும் சதிதமே கலியுகே -
ப்ரதமேபாதே - ஜம்பூத்வீபே - பாரதவர்ஷே
பரத : க்கண்டே - சகாப்தே - மேரோ : தக்ஷிணே

பார்ச்வே - 'அஸ்மின் வர்த்தமானே - வ்யாவஹாரிகே - ப்ரபவாதி ஷஷ்டிஸம்ம்வத்ஸராணாம் மத்யே - நாமஸம்வத்ஸரே - அயனே - ருதௌ - மாஸே - பக்ஷே - திதௌ - நக்ஷத்ரே - வாஸர யுக்தாயாம் - ஸ்ரீ விஷ்ணு யோக சுபயோக சுபகரண ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் - அஸ்யாம் சுபதிதௌ - கௌசிக கோத்ரே - கன்யா ராசௌ சித்ரா நக்ஷத்ரே ஜாதஸ்ய - ராஜசிம்ஹசர்மண : । அபபரணீ நக்ஷத்ரே மேஷராசௌ ஜாதாயா: விஜயலக்ஷ்மீ நாம்ன்யா: மம தர்மபத்ன்யா: । மிதுனராசௌபுனர் வஸூநக்ஷத்ரேஜாதாயா : ஹர்ஷினீ நாம்ன்யா : மம குமார்யா: - ஆவயோ: ஸஹகுடும்பஸ்ய க்ஷேம - ஸ்த்தைர்ய - தைர்ய - வீர்ய - விஜய - ஐச்வர்ய - ஸுகக்ஷேமாதி ஸகலஸம்பத : ப்ராப்திஸித்யர்த்தம் ஆபந்நிவாரணார்த்தம் - கஷ்டநிரஸனார்த்தம் அபம்ருத்யுநிவாரணார்த்தம் மனோ பீஷ்ட ஸித்த்யர்த்தம் ஸ்ரீபைரவதேவஸ்ய பூஜனம் அஹம்கரிஷ்யே ॥

என்று சொல்லவும்

(குறிப்பு :- இந்த ஸங்கல்பத்தின் போது எந்த நாளில் பூஜை செய்கிறோமோ அந்த நாளின்படி பஞ்சாங்கத்தைப் பார்த்து - வருஷம் - அயனம் - ருது - மாஸம் - பக்ஷம் - திதி - வாஸரம் இவற்றைக் கவனித்துக் குறித்து வைத்துச் சொல்லிச் செய்யவும். யார் கர்த்தாவோ - அவரது கோத்ரம் - ராசி - நக்ஷத்ரம் - பெயர் - மனைவியின் ராசி - நக்ஷத்ரம் - பெயர் - குழந்தையின் ராசி - நக்ஷத்ரம் - பெயர் இவற்றைச் சேர்த்துச் சொல்லிக் கொள்ளவும் மறக்கக்கூடாது.)

இப்படிச் செய்ததன் பிறகு பைரவ தேவரது மந்திரங்களைச் சொல்லி அஷ்டோத்தரம் முதலியவை சொல்லி அர்ச்சிக்கவும். மானசீகமாக உபாஸனை செய்யவும் வேண்டும். ஸ்தோத்திரங்களைச் சொல்லவும். கவசம் முதலானவற்றைச் சொல்லவும் சொல்ல வேண்டியது மிகவும் அவசியம். கந்தம் ஸமர்ப்பயாமி - தூபம் ஸமர்ப்பயாமி - தீபம் ஸமர்ப்பயாமி - புஷ்பானி ஸமர்ப்பயாமி - நைவேத்யம் ஸமர்ப்பயாமி என்று சொல்லிப் பூஜித்துப் படையலைப் படைத்து வழிபடவும்.

## மந்த்ர த்யானம்

இங்குள்ள மந்த்ரமயமான ஸ்தோத்ரத்தை மெதுவாகச் சொல்ல வேண்டும்.

## மந்த்ரம்

ப்ரணவம் காமதம் வித்யால்லஜ்ஜா பீஜம் ச ஸித்திதம்।
வடுகாயேதி விஜ்ஞேயம் மஹாபாதக நாசனம் ॥ 1

உத்யத்பாஸ்கர ஸந்நிபம் த்ரிநயனம்
ரக்தாங்கராகஸ்ரஜம்
ஸ்மேராஸ்யம் வரதம் கபாலம் அபயம்
சூலம் ததானம் கரை:

நீலக்ரீவம் உதாரகௌஸ்துபதரம்
சீதாம்சு சூடோஜ்வலம்
பந்தூகாருண வாஸஸம் பயஹரம்
தேவம் ஸதா பாவயேத் ॥ 2

நமோ பைரவரூபாய பைரவாய நமோ நம: ।
நமோ பத்ரஸ்வரூபாய ஜகதாத்ய நமோ நம: ॥ 3

வந்தே பாலம்ஸ்ப்படிகஸத்ருசம்
குண்டலோத்பாஸி தாங்கம்
திவ்யா கல்பை : நவமணி மயை:
கிங்கிணீ நூ புராட்ட்யை: ।
தீப்தாகாரம் விசதவதனம்
ஸுப்ரஸன்னம் த்ரிநேத்ரம்
ஹஸ்தாக் ராப்யாம் வடுக ஸத்ருசம்
சூலதண்டோப தாரம் ॥ 4
கரகலிதகபால; குண்டலீ தண்டபாணி :
தருண திமிரநீலோ வ்யால யஜ்ஞோபவீதி ।
க்ருதுஸமயிஸபர்யா விக்னவிச்சேதஹேது :
ஜயதி வடுகநாத : ஸித்த்தித : ஸாதகானாம் ॥ 5

இந்த மந்த்ரத்தைச் சொல்லிப் பைரவதேவனை ஆராதனை செய்து உபாஸனையும் செய்யவும். இந்தப் பைரவ தேவர் பல வடிவங்களில் உள்ளார். எந்த உருவத்தையும் எண்ணி நீங்கள் உபாஸனையைச் செய்யலாம். எந்த மந்திரத்தையும் சொல்லி ஸாதனையையும் செய்யலாம். பைரவர்களில் 1) வடுக பைரவர், 2) பால பைரவர், 3) ஸ்வர்ணாகர்ஷண பைரவர், 4) சண்டபைரவர், 5) பயங்கர பைரவர், 6) க்ரோதான்மத்த பைரவர், 7) பீஷணபைரவர், 8) கபால பைரவர் 9) ஸம்ஹார பைரவர், 10) மஹா பைரவர் இவர்களை ஸாத்வீக - ராஜஸ - தாமஸ குணங்களின் முறையில் த்யானம் செய்ய சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றைச் சொல்வது செய்வது மிகவும் ச்ரேயஸ்கரமாகும்.

## ஸாத்விக ரூப த்யானம்

பைரவநாதர் சிவபெருமானின் ரௌத்ர அவதாரம். அவரது அதிகமான அளவு ரௌத்ரம் அது தாமஸ

ரூபத்தில் உள்ளது. ஆனால் வடுக பைரவர் - பால பைரவர் ஆகியோரது வடிவத்தில் பகவான் விஷ்ணுவுக்குச் சமமான பூர்ண சாத்விக குணத்துடன் கூடிய தயாள நிலை உள்ளது. சாதாரணமாக க்ருஹஸ்தர்கள் அநேகமாக இதே ரூபத்தில்தான் ஆராதனையையும் - உபாஸனையையும் செய்கிறார்கள். இதே ரூபத்தில் பைரவ தேவனை உபாஸனை செய்யும் போது தாங்கள் விரும்பினால் பைரவதேவரின் இங்குக் கூறப்பட்ட மந்திரங்களின் மூலமாகவே சிறப்பு உருவம் தாங்கி வருமாறு அழைக்கலாம். இதன் மூலமாகவே தியானம் செய்தால் ஆராதனையும் செய்தால் - அகால மரணம் சம்பவிக்குமோ என்ற பயம் அழியும். அணுகாது. ஆயுளும் - ஆரோக்கியமும் விருத்தியாகும். இறுதியில் மோக்ஷத்திற்குச் செல்லும் வழியும் சிறப்பாக அமையும்.

### மந்த்ரம்

ஓம் வந்தேபாலம் ஸ்ப்படிகஸத்ருசம்
குண்டலோத்பாஸிதாங்கம்
திவ்யாகல்பை : நவமணிமயை:
கிங்கிணீ நூபுராட்ட்யை:।
தீப்தாகாரம் விசதவதனம்
ஸுப்ரஸன்னம் த்ரிநேத்ரம்
ஹஸ்தாக்ராப்யாம் வடுக ஸத்ருசம்
சூலதண்டோப தானம்॥

## ஸ்ரீ பைரவதேவரின் ராஜஸ த்யானம்

ஸ்ரீ பைரவதேவர் சிவபெருமானைப் போலவே உறுப்புகளைக் கொண்ட யோகியாவார். ஆனால் அவர் மூவுலகச் செல்வத்திற்கும் - சிறப்பிற்கும் காரண பூதரான ஸ்வாமியாவார்.

அவரது ஒரு வடிவம் மிகப் பயங்கரமானது. இன்னொரு வடிவம் உலகைச் செலுத்துகின்ற ஸ்வாமியின் ராஜஸ வடிவம். செல்வம் முதலியன பெறவேண்டுமானால் - லௌகிகமான சில செயல்களை அடைய விரும்பினால் இதே ரூபத்தில் பைரவ தேவரை உபாஸிக்க வேண்டும். ஸ்வர்ணாகர்ஷண பைரவரைப் போல ராஜஸ வடிவத்தில் பைரவ தேவரை அழைக்கக் கூடிய சிறப்பு மந்திரம் இதோ -

## மந்த்ரம்

ஓம் உத்யத் பாஸ்கரஸந்நிபம் த்ரிநயம்
ரக்தாங்கராக ஸ்ரஜம்
ஸ்மேராஸ்யம் வரதம் கபாலம் அபயம்
சூலம் ததானம் கரை : ।
நீலக்ரீவம் உதார பூஷணயுதம்
சீதாம் சு க்கண்டோஜ்வலம்
பந்தூகாருண வாஸஸம் பயஹரம்
தேவம் ஸதாபாவயே ॥

## ஸ்ரீ பைரவரின் தாமஸ த்யானம்

மிகப்பயங்கரமான தந்திர ஸாதனையைச் செய்கிறவர் அநேகமாகப் பைரவ தேவரின் ரௌத்ராகாரமான பயங்கர வடிவத்தில் பூஜையையும் - உபாஸனையையும் செய்வர். பகைவரை விரட்டிட மந்த்ரத்தையும் - யந்த்ரத்தையும் பயன்படுத்துவர் அப்போது இந்தப் பைரவ தேவரை ஸம்ஹார பைவராகவோ - கால பைரவராகவோ எண்ணி ரௌத்ராகார வடிவில் த்யானம் முதலியன செய்து ஸித்தியைப் பெறுவர். மிகப் பயங்கரத் தோற்றமுள்ள ஸ்ரீ பைரவரை அழைக்கும்போது தாமஸ த்யானமாக இந்த மந்திரம் சொல்லப்படுகிறது.

**மந்த்ரம்**

ஓம் த்யாயேத் நீலாத்ரி காந்திம்
சசிகலதரம் முண்டமாலம் மஹேசம்
திக்வஸ்த்ரம் பிங்க கேசம் டமரூஹஸ்த
ஸ்ருணிம் க்கட்க பா சாபயாணி ।
நாகம் க்க்கண்டாம் கபாலம் கரஸரஸி
ருஹை: பிப்ரதம் பீமதம்ஷ்ட்ரம்
திவ்யாகல்பம் த்ரிநேத்ரம் மணியே
லஸத்கிங்கிணீ நூபுராட்ட்யம் ॥

நடைமுறையில் இந்த ஸ்ரீ பைரவ தேவரின் ஆராதனையோ உபாஸனையோ செய்யும் போது ஸாத்விகம் - ராஜஸம் - தாமஸம் ஆகிய முக்குண பரிணாமத்தில் எவ்வித ப்ரயோகமும் செய்யப்படுவதில்லை. ஆனால் இந்த யந்த்ர மந்திர ப்ரயோகங்களைச் சிறப்பான பலனை உத்தேசித்து ஸித்தி ஏற்படுகிற சமயத்தில் செய்யப்படுகிறது. எந்த ரூபத்தில் இந்தப் பைரவ தேவனை எண்ணி ஒரு ஸாதகர் த்யானமோ - ஆராதனையோ - உபாஸனையோ செய்தாலும் அவர் கட்டாயம் அந்த ஸாதகருக்கு நேரில் காட்சியளிப்பார். ஒரு ஸாதகர் எத்தனை முறை ஸ்ரீ பைரவது மந்திரத்தை ஜபிக்கிறாரோ - த்யானம் செய்கிறாரோ - உபாஸனை - ஆராதனை செய்கிறாரோ - அவர்களது இத்தகைய செயல்களின் அளவுக்கு எவ்வளவு நம்பிக்கை கொண்டுள்ளாரோ - அந்த அளவுக்கு அந்தப் பைரவர் காட்சி தந்து அருள் பாலிப்பார். அவரைப் பலவகைகளில் உபாஸனாதிகள் செய்யும்போது பூரண நம்பிக்கை வைத்துத் துணிவுடன் தைரியமாகத் தளர்வு இல்லாமல் - தயங்காமல் செய்ய வேண்டியது மிகவும் முக்கியம். அப்போது உங்களது ஆராதனை - உபாஸனை

- ஜபம் இவற்றைக் கண்டு மகிழ்ந்து ஏற்று உங்கள் கண்ணெதிரே தோன்றி நீங்கள் உபாஸிக்கும் தெய்வமான ஸ்ரீ பைரவ நாதர் அருளைப் பொழிந்து காப்பார் என்பது உறுதி.

ஸ்ரீ பைரவரின் ஆராதனையும் - உபாஸனையும் நிறைவு பெற்றது.

ஓம் சாந்தி : ஓம் சாந்தி : ஓம் சாந்தி :

|| ஓம் ||



ஸ்ரீ

# ஸ்ரீ பைரவர் உபசார பூஜை முறை

ஸ்ரீ பைரவ தேவரின் எந்த உருவத்தை எண்ணியும் வைத்தும் உபாஸனையாலும் - பூஜை முறையாலும் வழிபடலாம். அவரது எந்த ஒரு யந்த்ரத்தையும் - மந்த்ரத்தையும் கொண்டு ஸாதனை செய்யலாம். இல்லை ஜபமும் செய்வதும் விசேஷம். இப்படி ஏதாவதொரு முறையை எடுத்துக் கொண்டு நாம் உபாஸிக்கும் தேவ தேவதையை நமது அன்பினாலும் - பிரியத்தாலும் வெளிப்படுத்தி மகிழ்விக்கலாம்.

உபாஸனையைச் செய்ய வேண்டித் தகுந்த ஆஸனம் போட்டு அதிலமர்ந்த பின்பு மற்ற தேவ தேவியரின் த்யானாதிகளை விட்டு வைத்து - ஒரே மன நிலையுடன் நாம் நமது உபாஸனா தெய்வமான ஸ்ரீ பைரவ தேவரைக் குறித்து த்யானம் செய்வது அவசியமாகும். இவ்வாறு செய்யும்போது ஸகலவிதமான பைரவ தேவர்களும் நமக்கு எதிரே வந்து நிற்பார்கள்.

அந்நேரம் நமது தெய்வீகக் கண்களைக் கொண்டு நாம் கட்டாயம் பார்க்கமுடியும். நமக்கு எதிரில் இரு வரிசையாக அணிவகுத்துள்ளபடி திண்ணை மேடை அமைக்கவும். வலது புற மேடையில் பூஜைக்கு உரிய பொருள்களை வைக்க வேண்டும். பகவான் பைரவர் அங்கு வருவதற்குச் சில மணி நேரமாகும். அவரை வரும் போது பார்க்க வேண்டும் என்று உங்கள் நம்மனம் துடிதுடிக்கும். அப்படிப் பகவான் பைரவர் வரும்போது அவருக்கு நாம் அதிதிஸத்காரம் - அதாவது உபசார வழிபாட்டு முறையைச் செய்யவேண்டும். இதே எண்ணத்தை மனத்தில் கொண்டு ஸ்ரீ பைரவ தேவரது திருவடிகளைப் பற்றிக் கொண்டு ஒவ்வொரு வகையான பணிமுறையைச் செய்யத் தொடங்க வேண்டும். இம்மாதிரியான பணிவிடைகளை - உபசார வழிபாடுகளைக் கற்பனை ரூபமாகத்தான் செய்கிறோம். வெளிப்படையாக மந்த்ரத்தைச் சொல்கிறோம். அப்படிச் செய்யக் கூடிய மந்த்ர ஸ்வரத்தை மற்றவர் காதில் விழாதபடி மெதுவாக உச்சரிப்புப் பிசகாமல் சொல்லி உபசாரங்களைச் செய்வது மிக முக்கியம்.

இப்பொழுது பைரவ தேவர் நமது எதிரில் தோன்றியுள்ளார் என்பதை நமது மனக்கண்ணால் கண்டு அறிந்து வழிபாட்டைத் தொடங்குதல் வேண்டும். இப்போது அவர் நமக்கு வெகு அருகிலேயேதான் நின்ற வண்ணம் இருக்கிறார் என்பதை முதன்முதலில் தெரிந்து கொண்டு - அவரை இன்னும் நமது அருகில் வருமாறு பிரார்த்தனை செய்யவும் வேண்டும். அவர் வந்ததும் பக்கத்தில் உள்ள மேடையில் அமரப் பிரார்த்திக்கவும் வேண்டும்.

## மந்த்ரம் அழைத்தல்

ஏஹ்யேஹி ருத்ரபகவன் பைரவ: ப்ருதிவீபதே ।
ப்ரஸன்னோ பவ தேவேச நமஸ் துப்யம் க்ருபாகர ॥

இப்பொழுது பைரவரை அழைத்து அக்ஷதை புஷ்பம் சேர்க்க வேண்டும்.

## ஆஸனம் - மந்த்ரம் (இருக்கை அளித்தல்)

பூதேசோ அத கணாத்யக்ஷோ முண்டமாலாதர: ப்ரபு: ।
ஆஸனம் திவ்ய மீ சானதாஸ்யே அஹம் துப்யமீச்வர ॥

ஸ்ரீ பைரவருக்கு ஆஸனம் தந்து அக்ஷதை சேர்க்கவும்.

இப்பொழுது நமது உபாஸனா தேவதை ஸ்ரீ பைரவர் ஆஸனத்தில் அமர்ந்தருளுகிறார்.

## பாத்யம் (காலலம்ப ஜலம் தரல்)

## மந்த்ரம்

சிவோ வடுக ருத்ரேசோ பூதநாத: ஸுரேச்வர: ।
பாத்யம் க்ருஹாண மத்தத்தம் பைர வீசோ க்ருபாகர: ॥

அங்குள்ள மேடையிலிருந்து குளிர்ந்த வாஸனையுள்ள ஜலகிண்ணத்தை வைத்துக் கொண்டு (இடது கையில்) ஈசனின் பாதங்களை அலம்புகிறேன் என்று சொல்லி அலம்பிடவும். அதற்கு உரிய மந்த்ரம் இதோ சொல்லப்பட்டது.

## அர்க்யம் (பூஜைக்குரிய ஜலம் தரல்)

பூதேச காளிகா காந்த பைரவ்யானந்த வர்த்தன: ।
அர்க்யம் க்ருஹாண லோகேச ப்ரபோ ஸர்வார்த்ததாயக ॥

இப்பொழுது பைரவதேவரை இரு கை கூப்பி அஞ்சலித்து மற்றொரு கரத்திரத்திலுள்ள கங்கா ஜலத்தை ஒரு குழிக்கரண்டியில் எடுத்து மூன்று முறை காட்டி விட்டு ஒரு கிண்ணியில் சேர்க்கவும்.

### ஆசமனீயம் (நீர் உட்கொள்ளல்)

### மந்த்ரம்

ஒரு குழிக்கரண்டியிலிருந்து சுத்த ஜலத்தை எடுத்துக் கொண்டு ஸ்வாமிக்கு மூன்று முறை காட்டி விட்டு ஒரு கிண்ணியில் சேர்க்கவும்.

### துக்த்த ஸ்நானம் (பால் குளியல்)

### மந்த்ரம்

இங்கு பல தரப்பட்ட குளியல் முறை சொல்லப் படுகிறது. இப்படிக் குளியல் முறைகளைச் செய்த பின்னர் மடி உடுத்தி அலங்காராதிகளைச் செய்ய வேண்டும்.

**கோ துக்தம் மதுரம் ஸ்வாது பரிசுத்தம் புரஸ்க்ருதம்**
**ஸ்நாநார்த்தம் க்ருஹ்யத ம் தேவ பரமேச ஜகத்ப்ரபோ ॥**

ஒரு குழிக்கரண்டியில் பாலை எடுத்துத் தெளித்துக் கிண்ணியில் சேர்க்கவும்.

### ததி ஸ்நானம் (தயிர்க்குளியல்)

### மந்த்ரம்

**துர்லபம் பகவன் ஸ்வாது ததிகண்டம் ப்ரியம் சுபம் ।**
**பைரவீநாதஸந்துஷ்டம் ஸ்நானார்த்தம் ஸ்வீகுரு ப்ரபோ ॥**

## க்க்ருத ஸ்நானம் (நெய்க்குளியல்)

### மந்த்ரம்

கவ்யம் க்க்ருதம் சுசிஸ்வாதுஸம் ஸேவ்யம் புஷ்டிவர்த்தகம்।
க்ருஹாண பைரவீபால ஸ்நானாய ஸுரஸத்தம ॥

ஒரு குழிக்கரண்டியில் உருக்கிய நெய்யை எடுத்துக் காட்டித் தெளித்து விட்டுக் கிண்ணியில் சேர்க்கவும்.

## மது ஸ்நானம் - (தேன் குளியல்)

### மந்த்ரம்

மதுரம் மதுராஸ்வாத சீரா ச மதுஸம்யுதா ।
ஸ்நானார்த்தம் க்ருஹ்யதாம் தேவசர்க்கரேதம்ப்ரதீயதே ॥

ஒரு குழிக்கரண்டியில் கொஞ்சம் தேனை எடுத்துக் காட்டி விட்டுக் கிண்ணியில் சேர்க்கவும்.

## சுத்த ஜல ஸ்நானம் (தூய நீர்க்குளியல்)

### மந்த்ரம்

ரேவா கோதாவரீ கங்கா பயோஷ்ணீ யமுனா ததா ।
ஸரஸ்வத்யாதி தீர்த்தானிஸ்நானார்த்தம் ஸ்வீகுருஷ்வ போ॥

ஒரு குழிக்கரண்டியில் தூய புண்ய தீர்த்தங்களை எடுத்துக் காட்டித் தெளித்து விட்டு ஒரு கிண்ணியில் சேர்க்கவும்.

## வஸ்த்ரம் (ஆடைதரல்)

வஸ்த் ராணி ச துகூலானி ஸுந்தராணி நவானி ச ।
மயா தத்தானி விச்வேச ப்ரஸன்னா வரதா பவ ॥

ஆடையை ஸ்வாமிக்கு அளிக்கவும். இன்றேல் அக்ஷதை புஷ்பம் சேர்க்கவும்.

## யஜ்ஞோபவீதம் (பூணூல் சாற்றல்)

### மந்த்ரம்

ஸௌவர்ணம் ராஜதம் திவ்யம் தாம்ரேணசவிநிர்மிதம் ।
உபவீதம் மயா தத்தம் தேவேச ப்ரதிக்ருஹ்யதாம் ॥

பைரவருக்குப் பூணூலைச் சார்த்தவும் இன்றேல் அக்ஷதை புஷ்பம் சேர்க்கவும்.

## சந்தன ஸமர்ப்பணம் (சந்தனம் தரல்)

### மந்த்ரம்

சந்தனம் சாரு கந்தாட்யம் ஸுஸ்நிக்தம் ஸுமனோஹரம் ।
கந்தம் க்ருஹாண பகவன் ப்ரீத்யர்த்தம் ப்ரதிக்ருஹ்யதாம்

சந்தனம் எடுத்துக் காட்டி விட்டுத் தெளிக்கவும்.

## பஸ்மஸமர்ப்பணம் (பஸ்மம் தரல்)

### மந்த்ரம்

சந்தனம் பூசிய பிறகு பஸ்மாவைப் பைரவர் பூசுவதால் இது இங்கே சேர்க்கப்பட்டுள்ளது. மிகவும் அவசிய மாகிறது.

ஓம் த்ர்யாயுஷம் ஜமத்கனே: ।
கச்யபஸ்யத்ர்யாயுஷம் ॥
யத் தேவேஷு த்ர்யாயுஷம் ।
தன்னோ அஸ்து த்ர்யாயுஷம் ॥

பைரவ தேவருக்குப் பஸ்மாவை எடுத்துப் பூசவும் தெளிக்கவும்.

## அக்ஷதை ஸமர்ப்பணம் (அக்ஷதை சேர்த்தல்)

அக்ஷதான் தவளான் திவ்யான் சாலிஜாதான் சுபான்வரான் ।
மயா ஸமர்ப்பிதான் பக்த்யா க்ருஹாண ஸுரவந்தித ॥

ஸ்வாமிக்கு மஞ்சள் படுத்திய அக்ஷதையை எடுத்துச் சேர்க்கவும்.

## புஷ்ப ஸமர்ப்பணம் (மலரளித்தல்)

### மந்த்ரம்

மால்யாதீனி ஸுகந்தீனி மாலத்யா தீனி வை ப்ரபோ ।
மயா ஆஹ்ருதானி புஷ்பாணி பூஜார்த்தம்
ப்ரதிக்ருஹ்யதாம் ॥

செம்மலர்களைப் பைரவருக்கு அளிக்கவும் அல்லது புஷ்ப மாலையை அளிக்கவும்.

## தூப ஸமர்ப்பணம் (சாம்ப்ராணி காட்டல்)

### மந்த்ரம்

வநஸ்பதி ரஸோத்பூதோ கந்தாட்ய; ஸுமனோஹர: ।
ஆக்க்ரேய: ஸர்வ தேவானாம்
தூபோ அயம் ப்ரதிக்ருஹ்யதாம் ॥

சாம்ப்ராணிப் புகையை ஸ்வாமிக்குக் காட்டவும்.

## தீப ஸமர்ப்பணம் (விளக்கு ஏற்றிக் காட்டல்)

### மந்த்ரம்

ஸாஜ்யம் த்ரிவர்த்தியம் யுக்தம்வஹ்னினா யோஜி
தம் மயா ।
தீபம் க்ருஹாண தேவேச த்ரைலோக்ய திமிராபஹம் ॥

நெய்விளக்கை ஏற்றிக் காட்டவும்.

## நைவேத்ய ஸமர்ப்பணம் (படையல் தரல்)

### மந்த்ரம்

அபூபானிச பக்வானி மண்டகா வடகானி ச ।
பாயஸம் ஸூபம் அன்னம் ச நைவேத்யம் ப்ரதிக்ருஹ்யதாம்॥

அப்பம் - வடை - தயிர் - சித்ரான்னங்கள் - பால் - பாயஸம் - ஸூப் - முதலியவற்றை ஸ்வாமிக்கு எதிரே வைத்துப் படையலைக் கைகாட்டிக் காட்டிப் படைக்கவும்.

## பானீய ஸமர்ப்பணம் - (நீர் தரல்)

### மந்த்ரம்

பானீயம் சீதளம் ரம்யம் காங்கேயம் சுத்தம் உத்தமம் ।
க்ருஹாண பைரவீ நாத தவ ப்ரீத்யா விநிர்மிதம் ॥

நீர் கொண்டு வந்து (ஒரு குழிக்கரண்டியில்) காட்டி விட்டுக் கிண்ணியில் சேர்க்கவும்.

## கரோத்வர்த்தனம் (கை அலம்ப ஜலம் தரல்)

### மந்த்ரம்

கற்பூராதீனித்ரவ்யாணி ஸுகந்தீனி மஹா ப்ரபோ ।
க்ருஹாண ஜகதாம்நாத கரோத்வர்த்தன ஹேதவே ॥

ஒரு குழிக்கரண்டியில் ஜலம் எடுத்துக் காட்டி விட்டுக் கிண்ணியில் சேர்க்கவும்.

## பல ஸமர்ப்பணம் (பழங்கள் தரல்)

### மந்த்ரம்

கதளீம் மாதுளிங்கம் ச நாரிகேள பலானி ச ।
க்ருஹ்யதாம் ஸுபக்வானி நானாவிதபலானி ச ॥

*வாழைப்பழம் - மாதுளை - த்ராக்ஷை - ஆரஞ்சு - இளநீர் முதலிய பலவகைப் பழங்களை ஸ்வாமிக்குக் காட்டிடவும்.*

## தாம்பூலம் ஸமர்ப்பணம் (வெற்றிலை பாக்குத் தரல்)

### மந்த்ரம்

**பூகீபல ஸமாயுக்தம் நாகவல்லீ தளைர்யுதம் ।**
**க்ருஹாண பைரவோதேவ கற்பூர ஸஹிதானி ச ॥**

*பச்சைக்கற்பூரம் - ஜாதிக்காய் - ஜாதிபத்ரி - கிராம்பு - ஏலக்காய் - பாக்கு ஸஹிதம் வெற்றிலை பாக்கு ஜலம் தெளித்துக் காட்டவும்.*

## தக்ஷிணா ஸமர்ப்பணம் (காணிக்கை தரல்)

**ஹிரண்ய கர்ப்ப ஸம்பூதம் - ராஜதம் திவ்ய பூஷிதம் ।**
**ஸதக்ஷிணம் மயா தத்தம் க்ருஹ்யதாம் ஸுரநாயக ॥**

*தங்கம் முதலான தக்ஷிணையை ஸமர்ப்பிக்கவும்)*

## கற்பூர நீராஜனம் (கற்பூர ஹாரத்தி காட்டல்)

### மந்த்ரம்

**நீராஜனம் ஸுமாங்கல்யம் கற்பூராதி ஸமன்விதம் ।**
**நீராஜயாமி பக்தேச பஞ்சதீபே ஸுரோத்தம ॥**

*கற்பூர நீராஜனத்தை ஸ்வாமிக்குக் காட்டவும்.*

## புஷ்பாஞ்ஜலி (மலர்வணக்கம்)

**யோஅபாம்புஷ்பம்வேத । புஷ்பவான் ப்ரஜாவான்**
**பசுமான்பவதி । சந்த்ரமாவா அபாம்புஷ்பம் ।**
**புஷ்பவான் ப்ரஜாவான் பசுமான்பவதி – ய ஏவம் வேத ॥**

*மலர்களை எடுத்துத் தூவவும்.*

## நமஸ்காரம் (வணக்கம் செய்தல்)

### மந்த்ரம்

ஓம் நமோ ஈசானா க்யாய அக்னி ரூபாய தே நம: ।
நமோ வாயுஸ்வரூபாய விச்வரூபாய தே நம: ॥

ஓம் நமோ ஜயஸ்வரூபாய ஜகஜ்ஜாட்ய நிவாரணே ।
மஹாபூதாய பூதாய பூதானாம் பதயே நம: ॥

நமோ ஆகாச வாஸாய வாஸினே ஸர்வயோகினாம் ।
நமோ ப்ராஹ்மண வாஸாய சூத்ரவாஸாய தே நம: ॥

நம : க்ஷத்ரிய வாஸாய வைச்ய வாஸாய தே நம: ।
நம: யக்ஷிநிவாஸாய பைரவாய நமோ நம: ॥

நமோ நளின ரூபாய நளினாங்க ப்ரகாசினே ।
நம : ஸூர்யஸ்வரூபாய பைரவாய நமோ நம: ॥

எட்டு உறுப்புகளும் தரையில் படும்படி கீழே விழுந்து வணக்கம் செய்யவும்.

## ப்ரதக்ஷிணம் (வலம் வரல்)

### மந்த்ரம்

யாநிகாநிச பாபானி ஜன்மாந்தர க்ருதானி ச ।
தானி தானி விநச்யந்து ப்ரதக்ஷிண பதே பதே ॥

பைரவதேவரை வலம் வரவும், இந்த மந்திரத்தைச் சொல்லிக் கைகூப்பியபடி சுற்றவும் சுற்றலாம். இவ்வாறு பலவகை உபசார வகைகளைப் பைரவருக்குச் செய்து வழிபடுவதும் மிகவும் அவசியமாகும். இதனால் பைரவதேவர் மனம் மகிழ்ந்து நாம் கேட்கும் மனவிருப்பங்களை நிறைவேற்றுவதோடு நமது

கஷ்டங்களைத் தீர்ப்பார். வியாதிகளைத் தீர்ப்பார். ஸுகங்களைத் தருவார். ஆபத்துகளைத் தவிர்ப்பார் என்கிறது பைரவ தந்த்ரம்.

உபசார பூஜைமுறை நிறைவு பெற்றது.

ஓம் சாந்தி : ஓம் சாந்தி : ஓம் சாந்தி :



ஸ்ரீ

ஓம் ச்ரியை நம : ஓம் ஸ்ரீ நிவாஸாய நம :
ஓம் மஹாமாயாயை நம :

# ஸ்ரீ பைரவர் உபாஸனை மந்த்ரம்

**(ருத்ரயாமளம் - யந்த்ரசக்தி)**

மத்யே அஷ்டதளம்பத்மம் கர்ணிகாகேஸரோஜ்வலம் |
த்ரிகோணம் சதத: க்ருத்வாஷட்கோணம் சததோந்யஸேத் ||
வர்த்துலம்ச அஷ்டபத்ரம் சதுரஸ்ரத்ரயாத்மகம் ||

நடுவில் 8 இதழ்த்தாமரை - நடுவே முக்கோணம் - பிறகு அதன் மேலே அறுகோணம் அதன்மீது இருவட்டங்கள். அதன் மேலே மூன்று கோடுகளுள்ள சதுர மண்டலம். இப்படி வரைந்து கொண்டு (தாமிரத்தகடு - வெள்ளித் தகட்டிலோ) மந்த்ர ஜபம் செய்தவற்கு முன்பு தினசரி இதைப் பூஜிக்க வேண்டும். இந்த யந்த்ரத்தை நமது முகத்திற்கு எதிரே வைத்துக் கொண்டு ஸ்ரீ பைரவரின் அருளைப் பெற வேண்டிக் கவச பாடத்தோடு ஜபம் செய்ய வேண்டும். இவ்வாறு செய்தால் எந்தவித இடையூறும் வந்து சேராது. காரியங்களும் சீக்கிரமே ஸித்தியாகும்.

ஸ்ரீ பைரவ யந்திரம்



## ஸ்ரீ வடுக பைரவ மந்த்ர ஜபமுறை
## விநியோகம் :

### மந்த்ரம்

ஓம் அஸ்யஸ்ரீ ஆபதுத்தாரண வடுக பைரமந்த்ரஸ்ய । ப்ருஹத் ஆரண்யகோ நாமருஷி : த்ரிஷ்டுப்ச்சந்த : । ஸ்ரீ வடுக பைரவோ தேவதா ஹ்ரீம் பீஜம் । ஸ்வாஹா சக்தி : । பைரவ : கீலகம் । மமஸர்வாபீஷ்டஸித்யர்த்தம் - ஸ்ரீ வடுக பைரவ ப்ரீத்யர்த்தம் ஜபே விநியோக : ॥

என்று சொல்லி ஜலத்தைக் கீழே விடவும்.

### ருஷிந்யாஸ :

### மந்த்ரம்

1. ஓம் ப்ருஹதாரண்யகருஷயே நம : । சிரஸி । (தலையைத் தொடவும்)

2. ஓம் த்ரிஷ்டுபச்சந்தஸேநம : முகே | (முகம் தொடவும்)

3. ஓம் ஸ்ரீவடுக பைரவ தேவதாயை நம : ஹ்ருதயே | (இதயம் தொடவும்)

4. ஓம் ஹ்ரீம் பீஜாய நம : குஹ்யே | (மர்மம் தொடவும்)

5. ஓம் ஸ்வாஹா சக்தயே நம : பாதயோ : | (கால்களில் தொடவும்)

6. ஓம் பைரவ கீலகாய நம : நாபௌ | (தொப்புளில் தொடவும்)

7. ஓம் விநியோகாய நம : ஸர்வாங்கே | (உடல் பூரா தொடவும்)

### கரந்யாஸ: (கைவைப்பு முறை)

1. ஓம் ஹ்ராம் வாம் அங்குஷ்ட்டாப்யாம் நம: (இரு ஆள் காட்டி விரல்களாலும் கட்டைவிரல்களை அடியிலிருந்து தடவவும்)

2. ஓம் ஹ்ரீம் வீம் தர்ஜனீப்யாம் நம: | (இரு கட்டை விரல்களின் நுனியால் ஆள்காட்டி விரல்களை அடியிலிருந்து தடவவும்)

3. ஓம் ஹ்ரூம் வூம் மத்யமாப்யாம் நம : | (முன் போலவே நடுவிரலை தடவவும்)

4. ஓம் ஹ்ரைம் வைம் அநாமிகாப்யாம் நம : | (முன் போலவே மோதிர விரலைத் தடவவும்)

5. ஓம் ஹ்ரௌம் வௌம் கனிஷ்ட்டிகாப்யாம் நம : | (முன் போலவே சுண்டு விரலைத் தடவவும்)

6. ஓம் ஹ்ர: வ : கரதலகரப்ருஷ்ட்டாப்யம் நம : | (முன் போலவே இரு கைகளையும் சேர்த்துத் தடவவும்)

## அங்கந்யாஸ: (உறுப்பு வைப்புமுறை)

### மந்த்ரம்

1. ஓம் ஹ்ராம் வாம் ஹ்ருதயாய நம : । (இதயம் தொடவும்)

2. ஓம் ஹ்ரீம் வீம் சிரஸேஸ்வாஹா । (தலை தொடவும்)

3. ஓம் ஹ்ரூம் வூம் சிகாயை வஷட் । (சிகை தொடவும்)

4. ஓம் ஹ்ரைம் வைம் கவசாய ஹூம் । (உடல் பூரா தொடவும்)

5. ஓம் ஹ்ரௌம் வௌம் நேத்ரத்ரயாய வௌஷட் । (கண்களைத் தொடவும்)

6. ஓம் ஹ்ர: வ: அஸ்த்ராயப்பட் । (ஆள்காட்டி விரலாலும் நடுவிரலாலும் சுடக்குப் போடவும்)

## மந்த்ர ந்யாஸ : அங்கந்யாஸ :

### மந்த்ரம்

1. ஓம் ஹ்ராம் ஹ்ரீம் அங்குஷ்ட்டாப்யாம் நம: ஹ்ருதயாய நம : । (கட்டைவிரல் - இதயம் தொடவும்)

2. ஓம் ஹ்ரீம் வடுகாய தர்ஜனீப்யாம் நம: । சிரஸே ஸ்வாஹா । (ஆள் காட்டி விரல் - தலை தொடவும்)

3. ஓம் ஹ்ரூம் ஆபதுத்தாரணாய மத்யமாப்யாம் நம : । சிகாயை வஷட் । (நடுவிரலையும் சிகையையும் தொடவும்)

4. ஓம் ஹ்ரைம் குரு குரு அநாமிகாப்யாம் நம: । கவசாயஹூம் । (மோதிர விரலையும் உடலையும் தடவவும்)

5. ஓம் ஹ்ரௌம் வடுகாய கனிஷ்ட்டிகாப்யாம் நம : | நேத்ரத்ரயாய வௌஷட் | (சுண்டுவிரலையும் கண்களையும் தொடவும்)

6. ஓம் ஹ்ர: ஹ்ரீம் கரதலகரப்ருஷ்ட்டாப்யாம் நம : | அஸ்த்ராயப்பட் | (கைகளை வழிக்கவும் - சுடக்கவும்)

## த்யானம் (வேண்டல்)

ஓம் கரகலிதகபால : குண்டலீ தண்டபாணி:
தருணதிமிரநீலோ வ்யாள யஜ்ஞோபவீதீ |
க்ரதுஸமயஸபர்யா விக்க்னவிச்சித்திஹேது :
ஜயதி வடுகநாத : ஸித்த்தித : ஸாதகானாம் ||

## மாலா ப்ரார்த்தனை

## மந்த்ரம்

மஹாமாலே மஹாமாலே ஸர்வசக்தி ஸ்வரூபிணீ |
சதுர்வர்க்க : த்வயி ந்யஸ்த : தஸ்மாத் மே ஸித்திதா பவ ||
அவிக்க்னம் குருமாலே த்வம் க்ருஹ்ணாமிதக்ஷிணேகரே |
ஜபகாலே ச ஸித்த்யர்த்தம் ப்ரஸீத மம ஸித்த்தயே ||

## பைரவ மூல மந்த்ரம்

"ஓம் ஹ்ரீம் வடுகாய ஆபதுத் தாரணாய குரு குரு வடுகாய ஹ்ரீம் ரீம்"

இந்த மூல மந்திரத்தை 1 லக்ஷம் தடவையோ 10000ம் தடவையோ சிரத்தையுடன் மன உறுதியுடன் நம்பிக்கையுடன் சிறிதும் பிசகாமல் - தளர்ச்சியடையாது ஜபம் செய்து வந்தால் பைரவரின் அருள் உடனே கிடைக்கும்.

ஜபத்தின் முதலில் வேண்டல் -

த்வம் மாலே ஸர்வ தேவானாம் ப்ரீதிதா சுபதா பவ ।
சிவம் குருஷ்வ மே பத்ரே யசோ வீர்யம் ச தேஹி மே ॥

## ஜப ஸமர்ப்பணம்

### மந்த்ரம்

"அனேன ஸ்ரீ வடுக பைரவ மந்த்ரஜபாக்யேன
கர்மணா ஸ்ரீ வடுக பைரவ : ப்ரீய தாம்"

## பலிதானம்

பிறகு வீட்டிற்கு வெளியே வாசலுக்கு இடதுபுறம் கொஞ்சம் லவங்கத்தையும் வெல்லத்தையும் வைக்கவும். மந்த்ரம் சொல்லவும்.

### மந்த்ரம்

"ஓம் ஹ்ரீம் வம் ஏஹ்யேஹி தேவீபுத்ர ஆபதுத்தாரக வடுக நாத கபிலஜடா பாராபாஸுர ஜ்வலத்பிங்கள நேத்ர ஸர்வகார்யஸாதக - மத்தத்தம் இமம் யதா உபநீதம் பலிம் க்ருஹ்ணக்ருஹ்ண கர்மானி ஸாதய ஸாதய ஸர்வமனோரதான் பூரய பூரய ஸர்வ சத்ரூன் ஸம்ஹாரய தே நம : ॥ வம் ஹ்ரீம் ஓம் ॥ "

இவ்வாறு ஜப பூஜை முடிந்ததும் கவ்சஸ்தோத்ரம் சொல்ல வேண்டும்.

## கவசமந்த்ரம்

ஓம் பாது சிரஸி நித்யம் பாது ஹ்ரீம் கண்ட்டதேசகே ।
வடுகம் பாது ஹ்ருதயே ஆபதுத்தாரணாய ச ॥ 1

குரு த்வயம் மே லிங்கஸ்ய ஆதாரே வடுகாய ச ।
ஸர்வதா பாது ஹ்ரீம்பீஜம் பாஹ்வோர் யுகளமேவ ச ॥ 2

ஷடங்கஸஹிதோ தேவோ நித்யம் ரக்ஷது பைரவ ।
ஹ்ரீம் வடுகாய ஸததம் ஸர்வாங்கே மம ஸர்வதா ॥ 3

ஹ்ரீம் காலாய பாதயோ : து பாது வீராஸனம் ஹ்ருதி ।
ஹ்ரீம் மஹாகால : சிர : பாது கண்ட்டதே சே து பைரவ:॥
4

தண்டபாணி : குஹ்யமூலே பைரவோஸஹிதஸ்தத : ।
லலிதாபைரவ : பாது அஷ்டாபி: சக்திபி : ஸஹ ॥ 5

விச்வநாத : ஸதா பாது ஸர்வாங்கே மம ஸர்வதா ।
அன்னபூர்ணா ஸதாபாது அம்ஸம் ரக்ஷது சண்டிகா ॥ 6

அஸிதாங்க : சிர : பாது லலாடம் பாது பைரவ : ।
சண்ட பைரவ : பாது வக்த்ரே கண்ட்டே ஸ்ரீ க்ரோத
பைரவ : ॥ 7

மூலாதாரம் பீஷணச்ச பாஹுயுக்மம் ச பைரவ : ।
ஹம்ஸபீஜம் பாதுஹ்ருதிஸோ (அ) ஹம்
ரக்ஷதுப்ராணயோ : ॥ 8

ப்ராணாபானஸமானம்ச உதானம் வ்யானமேவ ச ।
ரக்ஷந்து த்வாரமூலே து தசதிக்ஷு ஸமந்தத : ॥ 9

ப்ரணவ : பாது ஸர்வாங்கே லஜ்ஜாபீஜம் மஹாபயே ।
இதி ஸ்ரீ ப்ரஹ்மகவசம் பைரவஸ்ய ப்ரகீர்த்திதம் ॥ 10

கவசஸ்தோத்ரம் நிறைவு பெற்றது

ஓம் சாந்தி : ஓம் சாந்தி : ஓம் சாந்தி :

॥ ஓம் ॥

(குறிப்பு : இதை த்யானம் முடிந்த பின்பு சொல்லவேண்டும்.)

ஸ்ரீ:

(இங்கு உள்ள யந்த்ரத்தின் ஆவரணாதி பூஜை)

## மந்த்ரம் எழுப்பல்

(இந்தப் பகுதியில் இதன் விளக்கம் ஆரம்பத்தில் சொல்லப்பட்டது)

## மூல மந்த்ரம்

''ஓம் ஹ்ரீம் வடுகாய ஆபதுத்தாரணாய
குரு குரு வடுகாய ஹ்ரீம் ஸ்வாஹா''

(இந்தப் பைரவ மூர்த்தியை நேரில் இருப்பதாகக் கற்பனை செய்து கொண்டு த்யானம் செய்யவும். அமும் ஸ்ரீ பைரவம் யந்த்ரே ஆவாஹயாமி || என்று சொல்லி யந்திரத்தில் ஆவாஹனம் செய்யவும்.)

## பஞ்சபூஜை - மந்த்ரம்

1. ஓம் லம் ப்ருதிவ்யாத்மனே கந்தம் ஸமர்ப்பயாமி । (சந்தனம் தெளிக்கவும்)

2. ஓம் ஹம் ஆகாசாத்மனே புஷ்பை : பூஜயாமி (மலர் தூவவும்)

3. ஓம் யம் வாய்வாத்மனே தூபம் ஆக்ராபயாமி (சாம்பிராணி காட்டவும்)

4. ஓம் ரம் அக்ன்யாத்மனே தீபம் தர்சயாமி (விளக்கு காட்டவும்)

5. ஓம் வம் அம்ருதாத்மனே மஹா நைவேத்யம் நிவேதயாமி (ஏதாவது பழம் - அன்ன வகையறாக்களைப் படைக்கவும்)

6. ஓம் ஸம் ஸர்வாத்மனே ஸர்வ உபசார பூஜாம் ஸமர்ப்பயாமி (மலர் தூவவும்)

(இனி எல்லா இடத்திலும் மூல மந்த்ரத்தைச் சொல்லவும்).

**மந்த்ரம்**

1. ஓம் ஹ்ரீம் வடுகாய ஆபதுத் தாரணாய
குரு குரு வடுகாய ஹ்ரீம் ||
ஓம் ஸத்யோ ஜாதம்ப்ரபத்யாமி
ஸத்யோ ஜாதாய வை நமோ நம : |
பவே பவே நாதிபவே பவஸ்வ மாம்
பவோத்பவாய நம : ||

ஸ்ரீ பைரவம் யந்த்ரே ஆவாஹாமி | (மலர் தூவவும்)

2. (மூல மந்த்ரம் சொல்லவும். மேலே பார்க்க)

ஓம் வாமதேவாய நமோ ஜ்யேஷ்ட்டாய நம : |
ச்ரேஷ்ட்டாய நமோ ருத்ராய நம : |
காலாய நமோ கலவிகரணாய நம : |
பல விகரணாய நமோ பவாய நமோ
பல ப்ரமதனாய நமோ ஸர்வ பூத தமனாய
மனோன்மனாய நம : ||
ஸ்ரீ பைரவம் யந்த்ரே ஸத்தாபயாமி (மலர் தூவவும்)

3. (மூல மந்த்ரம் சொல்லவும்)

ஓம் அகோரேப்பயோ - அத கோரேப்ப்யோ
கோர கோர தரேப்ப்ய : | ஸர் வேப்ப்யோ
ஸர்வ ஸர்வேப்ப்யோ நமஸ்தே அஸ்து
மந்த்ர ரூபேப்ப்ய : ||
ஸ்ரீவடுக பைரவம் யந்த்ரேஸாந்தித்யம் கரோமி (மலர் தூவவும்)

4. (மூல மந்த்ரம் சொல்லிடவும்)

ஓம் தத்புருஷாய வித்மஹே மஹா தேவாய தீமஹி ।
தந்நோ ருத்ர: ப்ரசோதயாத் ॥

ஸ்ரீ பைரவருக்கு யோனி முத்ரை காட்டவும்.

5. (மூல மந்த்ரம் சொல்லவும்)

ஓம் ஈசானஸ்ஸர்வ வித்யானாம்
ஈச்வர: ஸர்வபூதானாம்
ப்ரஹ்மா அதிபதி : ப்ரஹ்மணோ அதிபதி:
ப்ரஹ்மா சிவோ மே அஸ்து ஸதாசிவோம் ॥
ஸ்ரீ பைரவரை வணங்கவும்.

## ஆவரண பூஜை (பூ போடவும்)

*(இங்கு உள்ள யந்த்ர கர்ணிகையின் நான்கு திசைகளிலும் அதன் மூலைகளிலும் மந்த்ரம் சொல்லிப் பைரவரை அர்ச்சிக்கவும்.)*

### மந்த்ரம்

1. ஓம் ஈசானாய நம: ।
2. ஓம் அகோராய நம: ।
3. ஓம் தத்புருஷாய நம: ।
4. ஓம் ஸத்யோஜாதாய நம: ।
5. ஓம் வாமதேவாய நம: ।

## எட்டு இதழ்களில் (பூ போடவும்)

1. ஓம் அஸிதாங்க பைரவாய நம: ।
2. ஓம் குரு பைரவாய நம: ।
3. ஓம் சண்ட பைரவாய நம: ।
4. ஓம் குரோத பைரவாய நம: ।

5. ஓம் உன்மத்த பைரவாய நம: ।
6. ஓம் கபால பைரவாய நம: ।
7. ஓம் பீஷண பைரவாய நம: ।
8. ஓம் ஸம்ஹார பைரவாய நம: । ஓம் ॥

## 6. கோணத்தில் (பூ போடவும்)

### மந்த்ரம்

1. ஓம் ஹ்ராம் வாம்ஹ்ருதயாய நம: । (இதயம் தொடவும்)
2. ஓம் ஹ்ரீம்வீம் சிரஸே ஸ்வாஹா । (தலை தொடவும்)
3. ஓம் ஹ்ரூம் வூம் சிகாயை வஷட் । (சிகை தொடவும்)
4. ஓம் ஹ்ரைம் வைம் கவசாய ஹூம் । (உடல் பூரா தொடவும்)
5. ஓம் ஹ்ரௌம் வௌம் நேத்ரத்ரயாய வௌஷட் (கண்களைத் தொடவும்)
6. ஓம் ஹ்ர : வ: அஸ்த்ராய ப்பட் । (சுடக்கவும்)

## எட்டு திசைகளிலும் (கிழக்கிலிருந்து தொடங்கவும் - பூ போடவும்)

### மந்த்ரம்

1. ஓம் டாகினீ புத்ராய நம: ।
2. ஓம் லாகினீ புத்ராய நம: ।
3. ஓம் ராகிணீ புத்ராய நம: ।
4. ஓம் காகினீ புத்ராய நம: ।
5. ஓம் சாகினீ புத்ராய நம: ।
6. ஓம் ஹாகினீ புத்ராய நம: ।
7. ஓம் மாலினீ புத்ராய நம: ।
8. ஓம் வாகினீ புத்ராய நம: ॥

## தெற்குப்புறம் (பூ போடவும்)

### மந்த்ரம்

1. ஓம் உமா புத்ராய நம: ।
2. ஓம் ருத்ர புத்ராய நம: ।
3. ஓம் மாத்ரு புத்ராய நம: ।

## மேற்புறத்திலே - (பூ போடவும்)

### மந்த்ரம்

ஓம் ஊர்த்வமுகீபுத்ராய நம :

## கீழ்ப்புறத்திலே (பூ போடவும்)

### மந்த்ரம்

ஓம் அதோமுகீபுத்ராய நம: ।

## மறுபடி கிழக்கிலிருந்து தொடங்கி ஈசான மூலைவரை பூ போடவும்

### மந்த்ரம்

1. ஓம் டாகினீ புத்ராய நம: ।
2. ஓம் லாகினீ புத்ராய நம: ।
3. ஓம் ராகிணீ புத்ராய நம: ।
4. ஓம் காகினீ புத்ராய நம: ।
5. ஓம் சாகினீ புத்ராய நம: ।
6. ஓம் ஹாகினீ புத்ராய நம: ।
7. ஓம் மாலினீ புத்ராய நம: ।
8. ஓம் வாகினீ புத்ராய நம: ॥

## தெற்குப்புறம் (பூ போடவும்)

### மந்த்ரம்

ஓம் ருத்ரமாத்ருகண: புத்ராய நம: |

## வெளிப்புறம் 8 இதழ்களில் (பூ போடவும்)

### மந்த்ரம்

1. வெளிப்புறக்கிழக்கில் - ஓம் ப்ரஹ்மாணீ புத்ராய நம: |
2. ஈசானத்தில் - ஓம் மாஹேச்வரீ புத்ராய நம: |
3. வடக்கில் - ஓம் கௌமாரீ புத்ராய நம: |
4. வாயு மூலையில் - ஓம் வைஷ்ணவீ புத்ராய நம: |
5. மேற்கில் - ஓம் வாராஹீ புத்ராய நம: |
6. நிருருதி மூலையில் - ஓம் இந்த்ராணீ புத்ராய நம: |
7. தெற்கில் - ஒரு சாமுண்டா புத்ராய நம: |
8. அக்னி மூலையில் - ஓம் மஹாலக்ஷ்மீ புத்ராய நம : | ஓம் ||

## 10 திசைகளிலும் (பூ போடவும்)

### மந்த்ரம்

1. ஓம் ஹேதுகபுத்ராய நம: |
2. ஓம் த்ரிபுராந்தக புத்ராய நம: |
3. ஓம் வேதாள புத்ராய நம: |
4. ஓம் வஹ்னி ஜிஹ்வா புத்ராய நம: |
5. ஓம் காலாத்மக புத்ராய நம: |
6. ஓம் கராள புத்ராய நம: |
7. ஓம் ஏகபாத புத்ராய நம: |
8. ஓம் பீமரூப புத்ராய நம: |
9. ஓம் அசல புத்ராய நம: |
10. ஓம் ஹாடகேச்வர புத்ராய நம:| || ஓம் ||

மறுபடி ஈசானம் முதலிய திசைகளில் வானில் - ஸ்வர்க்கத்தில் உள்ள யோகினிகளைப் பூஜிக்கவும்)

1. யோகினீ ஸஹிதம் திவ்ய யோகீசாய நம: |
2. யோகினீ ஸஹிதாந்தரிக்ஷகீசாய நம: |
3. யோகினீஸஹிதம் பூயிஷ்ட்ட யோகீசாய நம: ||

சாதம் மட்டும் சாப்பிட்டு புரஸ்சரணத்துடன் (ஜபம் ஸ்தோத்ரம் முதலியன) புலன்களை அடக்கி 2 லக்ஷம் தடவை ஜபம் செய்யவும். இதில் 10ல் ஒரு பங்கு - தேன் - சர்க்கரை - நெய் - எள் இவற்றைக் கலந்து ஹோமத்தில் ஆஹுதி செய்யவும்.

## பலி தானம்

முதன் முதலில் ஸ்ரீமஹா கணபதியையும் - ஸ்ரீ மஹா துர்க்கா தேவியையும் - பூஜிக்கவும் பலி தானம் செய்யவும். சாலி அன்னம் - பால் பாயஸம் - நெய் - பொரிப்பொடி - சர்க்கரை - வெல்லம் - கரும்புச்சாறு - தேன் ஆகிய இவற்றை ஒன்று சேர்த்துக் கலந்து - இரவு வேளையில் செஞ்சந்தனம் - செம்மலர்கள் இவற்றோடு பலிப் பிரஸாதத்தைப் படையல் செய்யவும். அல்லது அழகிய ஆடு பலியிடலாம் என்பர். ஆனால் அதற்குப் பதில் பூசணிக்காயைப் பலி தரலாம். ஆடு பலியிடுவது சரியல்ல. இப்படிச் செய்தால் ஸ்ரீ பைரவர் மனம் மகிழ்ந்து வேண்டிய வரங்களைத் தந்து நம்மை ஆபத்துகளிலிருந்தும் காப்பாற்றிச் சீக்கிரமாகவே பலனை அருள்வார் என்கிறது பைரவ தந்த்ரம்.

**ஸ்ரீ பைரவர் ஆவரண பூஜை நிறைவு பெற்றது.**

**ஓம் சாந்தி: ஓம் சாந்தி: ஓம் சாந்தி:**

**|| ஓம் ||**



## ஸ்ரீ பைரவர் உபாஸனை - (2)

## (ருத்ரயாமளம்)

தாந்த்ரீகமான செயல்களில் நாம் ஸித்தியைப் பெற வேண்டிடின் ஸ்ரீபைரவ நாதரின் அருள் கடாக்ஷத்தைப் பெறவேண்டும். ஏனெனில் அவரது அருள் இன்றேல் மந்த்ரஸாதனை புரிவதில் தடை ஏற்படும். எல்லாவிதமான ஸாதனைகளிலும் - ஸ்ரீ பைரவரைக் கட்டாயம் நினைக்கவேண்டும். குறிப்பாக - டைபாய்டு ஜுரமோ - கட்டிகளோ வரும்போது வெகுவிரைவில் நமது செயல்கள் யாவும் ஸித்தியைப் பெறவேண்டு மானாலும் கீழே இருக்கிற விதிமுறைப்படி விநியோகம் முதலானவை செய்து மந்த்ரங்களை ஜபம் செய்யவும்.

### மூலமந்த்ரம்

1. ஓம் ஹ்ரீம் வம் வடுகாய ஆபதுத்தாரணாய
குருகுரு வடுகாய ஹ்ரீம் ஸ்வாஹா

2. ஓம் ஹ்ரீம் வடுகாய க்ஷத்ரௌம் ஆபதுத்தாரணாய
குரு குருவடுகாய ஹ்ரீம் வடுகாய ஸ்வாஹா''

3. ஓம் ஹும் ஷம் நம்[3] கம்[1] கம்ஸம்[2] க்கம்
மஹா கால பைரவாய நம : ஸ்வாஹா ||

4. ஓம் க்ஷத்ரௌம் க்ஷத்ரௌம் ஸ்வாஹா ||

இத்தகைய மந்த்ரங்களைத் தினமும் நாம் 1008 தடவை ஜபித்து வந்தால் எல்லா அரிஷ்ட தோஷங்களும் நிவர்த்தியாகும். மொத்தம் 21000ம் தடவை ஜபம் செய்யவும்.

*அமைதி பெற விரும்பினால் தினசரிக் காலையில் 108 தடவையும் - நண்பகலில் 108 தடவையும் ஜபிக்கவும் வேண்டும்.*

## வடுக காயத்ரீ

''ஓம் ஹ்ராம் ஹ்ரௌம் நம: ।
ஓம் பூ : ஓம் புவ : ஓம் ஸ்வ :''
''ஓம் ஹ்ரீம் வடுகாய வித்மஹே
ஆபதுத் தாரணாய தீமஹி ।
தன்னோ வடுக: ப்ரசோதயாத் ॥''
ஓம் ஸ்வ :, ஓம் புவ:, ஓம் பூ:,
ஓம் நம: ஹ்ரௌம் ஹ்ரௌம் ஓம் ॥

## விநியோக :

## மந்த்ரம்

ஓம் அஸ்ய ஸ்ரீ ஆபதுத்தாரக ஸ்ரீ வடுக
பைரவ மந்த்ரஸ்ய । ப்ருஹத் ஆரண்யகோ
நாம ருஷி : । த்ரிஷ்டுப் ச் சந்த: । ஸ்ரீ வடுக
பைரவோ தேவதா । ஹ்ரீம் பீஜம் । ஸ்வாஹா சக்தி: ।
பைரவ : கீலகம் - மம ஸகலகார்யஸித்த்தயே
ஜபே விநியோக: ।

## ருஷ்யாதி ந்யாஸ :

## மந்த்ரம்

1. ஓம் ப்ருஹதாரண்யக ருஷயேநம: சிரஸி । (தலை தொடவும்)
2. ஓம் த்ரிஷ்டுப் ச் சந்தஸே நம : முகே । (முகம் தொடவும்)
3. ஓம் வடுக பைரவ தேவதாயை நம : ஹ்ருதயே । (இதயம் தொடவும்)

4. ஓம் ஹ்ரீம் பீஜாய நம: குஹ்யே । (மர்மம் தொடவும்)
5. ஓம் ஸ்வாஹா சக்தயே நம: பாதயோ : । (கால்கள் தொடவும்)
6. ஓம் பைரவ : கீலகாய நம : நாபௌ । (தொப்புளில் தொடவும்)
7. ஓம் விநியோகாய நம : ஸர்வாங்கே (எல்லா உடலையும் தொடவும்)

**கர ஹ்ருதயாதி ந்யாஸ :**

**(கை - அங்கவைப்பு முறை)**

1. ஓம் ஹ்ராம் வாம் அங்குஷ்ட்டா ப்யாம் நம : ஹ்ருதயாய நம : ।
(கட்டை விரலையும் - இதயமும் தொடவும்)

2. ஓம் ஹ்ரீம் வீம் தர்ஜனீ ப்யாம் நம: । சிரஸேஸ்வாஹா ।
(ஆள் காட்டி விரலையும் - தலையையும் தொடவும்)

3. ஓம் ஹ்ரூம் வூம் மத்யமாப்யாம் நம: । சிகாயை ஷட் ।
(நடு விரலையும் - சிகையையும் தொடவும்)

4. ஓம் ஹ்ரைம் வைம் அநாமிகாப்யாம் நம: । கவசாய ஹூம்।
(மோதிர விரலையும் - உடலையும் தொடவும்)

5. ஓம் ஹ்ரௌம் வௌம் கனிஷ்ட்டி காப்யாம் நம: । நேத்ரத்ரயாய வௌஷட் ।
(சுண்டு விரலையும் - கண்களையும் தொடவும்)

6. ஓம் ஹ்ர : வ : கரதலகரப்ருஷ்டாப்யாம் நம: । அஸ்த்ராய ப்பட் ।
(கைகளைச் சேர்த்துத் தடவவும் - தலைசுற்றிக் சுடக்கவும்)

## த்யானம் (வேண்டல்)

சாந்தம் பத்மாஸனஸ்த்தம் சசிமுகுடதரம்
முண்டமாலம் த்ரிநேத்ரம்
சூலம் கட்கம் ச வஜ்ரம் பரசு முஸலகே
தக்ஷிணாங்கே வஹந்தம் ।
நாகம் க்க்கண்டாம் கபாலம் மலினகரயுதம்
ஸாங்குசம் பாசம் அந்யே
நானாலங்காரயுதம் ஸ்ப்படிகமணிநிபம்
நௌமி பாலம் சிவாக்யம் ॥

## 6 நாள் ஜப ப்ரயோகம்

ருத்யாமளத்தில், இந்தப் பைரவ மந்த்ரத்தை 6 நாட்கள் ஜபம் செய்து வந்தால் - பலவிதமான செயல்களும் ஸித்தி அடையும். இது மிக உபயோகமாக இருக்கும் என்பதால் இங்குக் கூறுகிறோம்.

### 1. ஸ்தம்பனப்ரயோகம் – [அடக்கல்] ஞாயிறன்று

ஞாயிறன்று காலையில் எழுந்து இடுகாடு காலையில் சென்று

"ஓம் ஹ்ரீம் வடுகாய ஆபதுத்தாரணாய
குரு குரு வடுகாய ஹ்ரீம் ஓம் ஸ்வாஹா"

என்னும் மூல மந்த்ரத்தை 10000ம் தடவை ஜபிக்கவும். இரவு வேளையில் ஜாதிக்காய் - ஜாதி பத்ரி - அரளிப்பூ - இவற்றை நெய்யோடு சேர்த்து 10ல் ஒரு பங்கு

ஹோமத்தில் ஆஹுதி செய்யவும். இதனால் பகைவரை அடக்கலாம்.

**2. மோஹன ப்ரயோகம் – திங்கட்கிழமை**

திங்களன்று மத்தியான வேளையில் - கிணற்று நீரில் ஸ்நானம் செய்து - ஜலம் சிந்துகிற கிணற்று மேட்டில் அமர்ந்து - மேலே கூறிய மூல மந்த்ரத்தை 10000ம் தடவை ஜபிக்கவும். பிறகு நெய், எருமைப்பால், தயிர், சர்க்கரை இவற்றைக் கலந்து 10ல் ஒரு பங்கு ஹோமம் செய்யவும். இவ்வாறு ஹோமம் செய்யப்பட்ட பஸ்மத்தை நெற்றியில் இட்டுக் கொண்டால் அனைவரையும் மயக்கலாம்.

**3. ஆகர்ஷணம் – புதன்கிழமை**

புதன்கிழமையன்று 4 மணி அளவில் சூரியன் இருக்கும் போது - காலி வீட்டிற்குச் சென்று இம்மந்திரத்தை 10000ம் தடவை ஜபம் செய்யவும் - பிறகு இதில் 10ல் ஒரு பங்கு அரளி மலரையும் - வில்வப் பழத்தையும் கலந்து 10ல் ஒரு பங்கு ஹோமம் செய்தால் ஒருவரைக் கவரலாம்.

**4. வசீகரணம் – வியாழக்கிழமை**

வியாழக்கிழமை தினம் காலை சூரிய உதய காலத்தில் நதிக்கரையை அடைந்து இம்மூலமந்திரத்தை 10000ம் தடவை ஜபிக்கவும். பிறகு நெய் - நெல்லிக்காய் வில்வப்பழம் இவற்றைக் கலந்து ஹோமம் செய்தால் வசீகரிக்கலாம் அனைவரையும்.

**5. உச்சாடனத்திற்கு – வெள்ளிக்கிழமை**

வெள்ளிக்கிழமை தினம் மாலை வேளையில் ஆலமரத்தின் அடியிலமர்ந்து இம்மூலமந்த்ரத்தை 10000ம்

தடவை ஜபிக்கவும். பிறகு நெய் - பால் - தயிர் கரும்புச்சாறு - பசு மூத்ரம் இவற்றால் ஹோமம் செய்யவும்.

பைரவர் உபாஸனை நிறைவுபெற்றது.

ஓம் சாந்தி : ஓம் சாந்தி : ஓம் சாந்தி:



ஸ்ரீ :

## ஸித்தி தரும்

# நமஸ்காரம் - அர்ச்சனை

நாம் முழு நேரப் பூஜை முறைகளையும் 1008 நாமாக்களையும் குறிப்பிட்ட கால அளவு வரை சொல்ல இயலாதவர்கள் - இந்தப் பைரவ தேவ உபாஸனா காலத்தில் மிக முக்கியமான சில நாமாக்களைச் சொல்லி ஆராதனையையோ - ஸாதனையையோ - உபாஸ னையையோ அதிகமாக வேலை முதலானவைகளில் ஈடுபட்டவர்கள் சொல்லலாம் எனச் சாஸ்திரம் கூறுகிறது.

இங்கு ஸஹஸ்ர நாமம் (1008) ஜபிப்பது மிகவும் நல்லதுதான். இருந்தாலும் இதைச் செய்ய இயலாதவர்கள் செயலில் ஈடுபட்டிருப்பதால் அதிக நேரம் ஒதுக்க முடியாமையால் இங்குள்ள 22 நாமாக்களைச் சொல்லி ஜபித்து வரலாம். அதனாலும் பல நல்ல பலன்கள் பெறலாம் என்பதற்காக அவற்றை இங்குத் தருகிறோம். இந்த நாமாக்களை நமஸ்காரம் - அர்ச்சனை செய்த வண்ணம் செய்யலாம்.

1. ஓம் வடுகாய நம : |
2. ஓம் ஸார பூதாய நம : |
3. ஓம் த்ரைலோக்ய நாத நாதாய நம : |
4. ஓம் நாத நாதாய நம : |
5. ஓம் வடுக நாதாய நம : |
6. ஓம் காளிகா நாதாய நம : |
7. ஓம் காமதாய நம : |
8. ஓம் லோகரக்ஷகாய நம : |
9. ஓம் பூதநாதாய நம : |
10. ஓம் கணச்ரேஷ்ட்டாய நம : |
11. ஓம் வீரவந்த்யாய நம : |
12. ஓம் தயாநிதயே நம : |
13. ஓம் கபாலினே நம : |
14. ஓம் குண்டலினே நம : |
15. ஓம் பீமாய நம : |
16. ஓம் பைரவாய நம : |
17. ஓம் பீமவிக்ரமாய நம : |
18. ஓம் வ்யாளயஜ்ஞோபவீதினே நம : |
19. ஓம் கவசினே நம : |
20. ஓம் சூலினே நம : |
21. ஓம் சூராய நம : |
22. ஓம் சிவப்ரியாய நம : || ஓம் ||

இத்தகைய மிகவும் முக்கியமான பைரவ நாமாக்களைச் சொல்லியடி நமஸ்காரம் செய்பவர்கள். இப்படி நமஸ்காரம் - மந்த்ரப்ரயோகம் - உபாஸனை -

ஸாதனை புரியும் சமயம் - சமயம் கிடைக்காமையால் - குழப்பம் அடைய வேண்டியிருக்கிறது. ஆனால் பொதுவாக இப்படிக் குறிப்பிட்ட மந்த்ரங்களை மட்டும் - பூஜையோ - அர்ச்சனையோ குறைவான நேரத்தில் செய்யலாம். ஆலயங்களிலும் இவ்வாறே செய்யலாம். விக்ஹரத்தின் - உருவத்தின் எதிரே இப்படி நமஸ்காரத்தைச் செய்யும் போது பழம் - புஷ்பம் - சந்தனம் - தூபம் - தீபம் வைத்துப் பூஜையையும் - அர்ச்சனையையும் செய்வது விசேஷ பலனைத் தரும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

## பயம் போக்கும் பத்து நாமாக்கள்

கபாலீ குண்டலீ பீமோ பைரவோ பீமவிக்ரம : ।
வ்யாளோ பவீதி கவசீ சூலீ சூர: சிவப்ரிய : ॥
ஏதானி தச நாமானி ப்ராதருத்தாய ய : படேத் ।
பைரவீ யாதனா ந ஸ்யாத் பயம் க்வாபி ந ஜாயதே ॥

இந்தப் பைரவ தேவரின் 10 முக்கிய மந்திரத்தை ஜபம் செய்து வந்தால் நல்ல பயன் உண்டு. இதனால் பூத ப்ரேத உபாதை நீங்கும். எதிர் வரும் பயமும் தீரும். நோய் நொடிகளைத் தீர்க்கும். இம்மந்த்ரத்தை முடிந்தளவு ஜபம் செய்து வந்தாலே ஸித்தியைப் பெறலாம்.

நமஸ்கார மந்த்ரங்கள் நிறைவு பெற்றன.

ஓம் சாந்தி : ஓம் சாந்தி : ஓம் சாந்தி:

॥ ஓம் ॥



ஸ்ரீ :

# ஸ்ரீ பைரவர்
# ஸாதனையும் உலக வழக்கும்

பல அறவழி முறைப்படி நாம் ஆராதிக்கும் தேவதையைக் குறித்து, உண்மையான - மனப்பூர்வமான பக்தியுடனும் - சிரத்தையுடனும் - திடமான நம்பிக்கை யுடனும் இருந்து பூஜை - ஆராதனை செய்வது எத்தகைய மகிமை பொருந்தியதோ; அத்தகைய மகிமை தேவதை களின் மந்த்ரங்களைச் சரியான முறையில் பிசகில்லாத உச்சரிப்பிலும் - சரீரத் தூய்மையிலும் - செயல்முறை களிலும் கூட இருக்கிறது. இதன் காரணமாகப் பகவானின் பலதரப்பட்ட அவதாரங்களிலும் - தேவீ தேவதையரின் ஆராதனைகளிலும் சாஸ்த்ரோக்தமான விதிமுறை உள்ளது. இம்முறையினைப் பக்தர் பெருமக்களோ - ஸாதகரோ மாற்றியமைக்க முடியாது.

யாவரும் உண்மையான உள்ளத்தோடு பைரவ தேவரை எந்த வகையிலாவது நினைவுபடுத்தி வழிபாடு நடத்த வேண்டும். அப்போது பைரவதேவர் விரைவிலே ப்ரஸன்னராவார். மேலும் ஒரு ஸாதகர் எந்த ஒரு விதிமுறைப்படி ஆராதனையோ - உபாஸனையோ மந்த்ர - தந்த்ர ஸாதனையோ செய்தாலும் அவற்றை அவர் ஏற்று மகிழ்கிறார்.

இதே பைரவதேவர் எல்லோருக்கும் - இனப் பாகுபாடு பாராமல் ஸகலரும் கொண்டாடத்தக்க - விரும்பத்தக்க உபாஸனைக்குரிய தெய்வமாகக் கருதப் படுகிறார். தீவிர யோகியரும் நாத ஸம்ப்ரதாயத்தை அணுகும் ஸாதகரும் - சுடுகாட்டில் - யந்த்ர - மந்த்ர

வழிபாடு நடத்தும் காபாலிகரும் - உலகையே மறந்த நிலையில் உள்ள அவதூதர்களும் - இப்படி ஒவ்வொரு வருமே இந்தப் பைரவதேவரின் ஆராதனையையும் - உபாஸனையையும் செய்து வருகிறார்கள். ஏனெனில் இந்தப் பைரவரின் வழிபாட்டில் மாமிசம் முதலிய தாமஸ பதார்த்தங்களைப் படைத்து வழங்குவதும் - அவற்றைப் பெறுவதுமே காரணமாகும்.

ஆனால் மந்த்ர ஸாதனையில் பலதரப்பட்ட உலக வழக்கங்கள் கையாளப்படுகின்றன. அதாவது இந்த மந்த்ர முறைகள் பொதுவாக ஜனங்களிடையே குரு சிஷ்ய வடிவத்தில் இருந்து இந்த யந்த்ர - மந்த்ர ஸாதனத்தைக் கற்றுத் தரும்போது ''கர்ம காண்டம்'' பயனாவதில்லை. அப்போது ஒரு ஸாதகன் தனது அறிவுத் திறனுக்கு ஏற்றவாறும் - எண்ணத்திற்கு உகந்தவாறும் மந்த்ரங்களின் ஜபம் முதலானவை தொடங்கப்படுவதைக் காணலாம். இப்படி மந்த்ர ஜபம் செய்வதற்கு முன்னமே யந்த்ரம் வைக்கப்படுகிறது. அதன் பிறகு பைரவரின் த்யானம் செய்யப்படுகிறது. எவ்வளவு எண்ணிக்கை ஜபதபாதிகள் செய்கிறோமோ அதில் 10ல் ஒரு பங்கு ஹோமம் செய்யப்படவேண்டும்.

எப்படி எல்லாத் தேவதைகளையும் வழிபாடு செய்கிறோமோ அதே போலவே பைரவதேவர் உருவமோ - படமோ பகவான் இருப்பதற்கு அடையாளமாக வைத்துக் கொண்டு வழிபாடு செய்யலாம். அப்படிச் செய்யும் போது அவரே நேரில் இருப்பதாக ஐதீகம். இவற்றுள் யந்த்ரம் - மந்த்ரம் - தந்த்ரம் என்பது இடைப்பட்டதாகும். உள்ளடங்கியதாகும்.

நாம் இந்தப் பைரவதேவரை வைத்து எண்ணி த்யானம் செய்கிறோம். அப்போது அவர் நம் அருகில் இருப்பதாக

உணர்கிறோம். ஆனால் எதிரிலே எந்த ஒரு அடையாளமும் - படமும் கூடக் கிடையாது. யந்த்ரத்தை மட்டும் எதிரிலே வைத்துக் கொண்டு ஜபம் (மந்த்ரம்) செய்கிறோம். தந்த்ர ஸாதனையில் மந்த்ரங்களை ஜபிக்கும் போது யந்த்ரம் அங்குச் சிறப்புப் பெறுகிறது. பூஜையிலோ - ஆராதனையிலோ ஏதாவது ஓர் உருவம் தேவைப்படுகிறது. பொதுவாகத் தாந்த்ரீகர்களால் சொல்லப்பட்ட மந்த்ரங்களின் மூலமாகத் தந்த்ர ஸாதனை புரியலாம். இல்லையேல் முன்னம் நாம் சொல்லப்பட்ட விதத்தை வைத்துச் சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட விதிமுறைகளின்படி மந்த்ர ஜபம் செய்யலாம். குறிப்பாக நாம் பைரவதேவரின் ஆராதனையையோ - உபாஸனையையோ - அவரது ஏதாவதொரு மந்த்ர ஜபத்தையோ - யந்த்ரமந்த்ர ஸித்தி பெற எண்ணும் போது சுபதிதி - சொல்லி சுப நக்ஷத்ரம் - சுபமுஹூர்த்தம் ஆகிய எல்லாவற்றையும் பார்த்து வைத்துக் கொண்டு - தாமிரம் அல்லது வெள்ளித் தகட்டில் வரையப்பட்ட மந்த்ர யந்தரங்களை ப்ரயோகிக்க வேண்டும். அல்லது ஒரு பூர்ஜபத்ரத்தில் எட்டு வாஸனைப் பொருள்களைக் கொண்டு யந்த்ர - மந்த்ரங்களை வரைந்து வைத்துக் கொள்ளலாம். அதன் உள்ளே வரையப்படும் கோடுகளும் மந்த்ரங்களும் தெளிவாகத் தெரிய வேண்டியது மிகவும் முக்கியமாகும். இப்படித் தயார் செய்த மந்த்ர - யந்திரத்தை வைத்துக் கொண்டு ஜபித்து வரலாம் - பூஜை செய்யலாம்.

ஒரு லக்ஷமோ - இரண்டு லக்ஷமோ மந்த்ர ஜபம் செய்யலாம். அப்படிச் செய்வதானால் அதில் 10ல் ஒரு பங்கு ஹோமம் செய்யவும் வேண்டும். தினமும் நாம் ஜப செய்ததற்கு பின்னால்.

''ஓம் ஹ்ரீம் ஹ்ரீம் நம:'' என்ற இம்மந்த்ரத்தைச் சொல்லித் தொடங்க வேண்டும். நமஸ்காரமும் செய்ய வேண்டும் இப்படிப் பைரவரை எண்ணி வழிபட்டால் ஸித்தி உண்டாகும். ஸாதகரின் எல்லா விருப்பங்களும் பூர்த்தி அடையும்.

◆ குறிப்பாக யாருக்கும் கெடுதலை உண்டாகும்படி இந்த மந்த்ரங்களைப் பயன்படுத்தக்கூடாது. ஏனெனில் அப்படித் தாறுமாறான எண்ணங்கொண்டு ஜபித்தால் அதனால் நமக்கே கேடு விளையும் என்பதை அறியவும் வேண்டும். ஆனால் நாம் நமது பொதுவான விருப்பங்களை உத்தேசித்துச் செய்யலாம். பகவானின் அருளைப் பெற வேண்டியும் செய்யலாம். இப்படி ஸாத்வீகமான முறை ஜப தபாதிகளையும் - பூஜை - ஆராதனை வழிமுறை களையும் முறை பிசகாது செய்து வருவோமானால் அந்தப் பைரவர் ஸித்தி தர நம் உள்ளத்திலே வந்து குடிகொள்வார். பொதுவாக இந்த மந்த்ர ஜபத்தைக் காளராத்ரி சமயத்திலோ - சந்த்ர - ஸூர்ய க்ரஹணத்தின் போதோ இரவு வேளையில் செய்து வந்தால் சீக்கிரம் ஸித்தி ஏற்படும் என்கிறது தந்த்ர சாஸ்திரம். அதுவும் தெற்கு நோக்கி அமர்ந்து செய்யவேண்டும். மந்த்ரத்தை 1008 தடவை ஜபிக்கவும். அதன் பின்னர் - செவ்வரளி - ஸிந்தூரம் - லவங்கம் - இவற்றை வைத்துக் கொண்டு நான்கு முக தீபத்தை ஏற்றி வைத்து - ஜபத்தின் 10ல் ஒரு பங்கு ஹோமம் செய்யவும்.

◆ குறிப்பு : மீண்டும் சொல்கிறோம் இம்மந்த்ரங்களை உச்சரிப்புப் பிசகாமல் கவனக்குறைவில்லாமல் - தளர்ச்சி கொள்ளாமல் - துணிவுடன் - உறுதியுடன் - சிரத்தையுடன் இருந்து முழு நம்பிக்கை வைத்து -

நமக்கு வேண்டிய பொருளையோ - மற்றவற்றையோ வேண்டிச் செய்ய மிகவும் நல்லது.

◆ தவறுதலாகக் கீழ்த்தர எண்ணங்கொண்டு - கெடுக்கும் நோக்கத்துடன் மற்றவரைத் துன்புறுத்தும் நோக்க முடன் செய்வோமேயானால் அத்துயரம் நம்மையே வந்து வாட்டும் - வதைக்கும் என்பதை மட்டும் மறக்கவே மறக்க வேண்டாம் என்று உறுதியாகவும் இறுதியாகவும் சொல்கிறோம்.

◆ எதையும் நல்லவற்றிற்குப் பயன்படுத்துவதே மிகவும் நல்லது என்பதை உணரவும்.

குறைவறச் செய்தால் நிறைவுறப் பெறலாம்!

ஸ்ரீ பைரவர் ஸாதனையும்
உலக வழக்கும் நிறைவு பெற்றது.

**ஓம் சாந்தி : ஓம் சாந்தி : ஓம் சாந்தி :**

**|| ஓம் ||**



**ஸ்ரீ :**

# ஸ்ரீ பைரவர் மந்த்ரஸாதனை

தேவதைகளின் எழுத்துகளே மந்திரம் என்பது. தெரியாத வடிவங் கொண்டது. மந்திரங்களிலே தேவதைகள் தானே வாசம் செய்கிறார்கள் என்பதை சகல சாஸ்திரங்களும் எடுத்து கூறுகின்றன. நல்ல உள்ளத்தோடு - உண்மையான உள்ளத்தோடு பரிபூர்ண நம்பிக்கையோடு விதிமுறைப்படி மந்த்ரங்களை ஜபம் செய்து வரும்

ஸாதகரிடம் தேவதைகள் ப்ரஸன்னமாகி மகிழ்வும் கொள்வர். முழு உருவத்தோடு ஸாதகரின் எதிரில் தோன்றி அவர்களுக்குத் தரிசனம் தருவது மட்டுமல்ல. அவர்களது மன விருப்பங்களையும் காரியங்களையும் கூட ஸித்தி பெறச் செய்வார்கள்.

பண்டைய காலத்தில் முனிவர்களது அழைப் பிற்கிணங்க தேவியரும் - தேவதைகளும் உண்மையான உருவத்தோடு காட்சி தருவார்கள். அது அவர்களது மந்த்ரங்களின் மகிமை - அதிசயம். அந்நாளில் திரௌபதி ஒரு குரல் கொடுத்ததுமே அங்குக் கிருஷ்ணன் தோன்றினார். சிறுபிராயத்திலிருக்கும் போது மந்திரம் சொல்லி அழைத்ததன் பேரில் ஸூர்யதேவனும் - கல்யாணத்திற்குப் பிறகு முறையாக ஸ்வர்க்க - நரக ஆட்சியாளர்களும் - நியாயாதீசனான தருமராஜனும் - யமதர்மனும் - இந்திர தேவனும் - அசுவினீ குமாரர்களும் தங்கள் உடலுடன் தோன்றி அவளுக்குப் பிள்ளைப்பேற்றை அளித்தனர். இது எதனால்? மந்திரத்தின் அபார மகிமையால்தான் என்றால் மிகையாகாது. எனவே இந்தக் கலி காலத்திலும் பூரணமான விதிமுறை பிசகாமல் மந்திரங்களை அனுஷ்ட்டானம் செய்து வந்தால் இவ்வுலகில் எல்லா விருப்பங்களும் நிறைவேறும். மரணத்திற்குப் பிறகு பகவானின் திருவடிகளை அடையக்கூடிய பாக்கியமும் உண்டாகும். ஸாதகர்களுக்கு இதில் சிறிதளவு சந்தேகம் ஏற்படத் தேவை இல்லை.

**மந்த்ரம்**

**ஓம் ஹ்ரீம் வடுகாய ஆபதுத்தாரணாய**
**குரு குரு வடுகாய ஹ்ரீம் || ஸ்வாஹா**

## வேறு

"ஓம் வடுகாய கஷ்ட உத்தாரணம் குரு குரு
வடுகாய ஹ்ரீம் ஸ்வாஹா"

ஆகிய இந்த இரு மந்த்ரங்களுமே மிகச் சிறியது சுலபமானது. இது பைரவதேவரின் நவாக்ஷர (9 எழுத்து) மந்திரமாகும். பைரவரது இந்த மந்திரம் ஸகல ஸித்தியையும் தரவல்லது. இம்மந்திரத்தை ஒரு நாளைக்கு ஒரு தடவையோ மிக அதிக எண்ணிக்கை யிலோ ஜபம் செய்வது நல்லது. சிறப்பான மன விருப்பங்கள் யாவும் நிறைவேற வேண்டுமானால் 40000ம் தடவை ஜபிக்க வேண்டும். பிறகு இதில் 10ல் ஒரு பங்கு ஹோமம் செய்யவேண்டும். இதை 18 தினங்களில் செய்தாலே ஸாதகரின் விருப்பம் யாவும் பூர்த்தியாகும்.

## நவாக்ஷர மந்த்ரம்

"ஓம் நமோ பைரவாய ஸ்வாஹா"

சாபோத்தாரணம் செய்வதற்காகச் சாஸ்திரங்களில் கீழே விசேஷ மந்திரம் சொல்லப்படுவதைப் பார்க்கவும். இம்மந்திரத்தை 21 தடவை ஜபித்தாலே ஸாதகரின் பாபங்களும் - சாபங்களும் உடனே தீரும். எந்தக் காரியத்தைச் செய்யத் தொடங்கினாலும் இம்மந்திரத்தை 21 தடவை கட்டாயம் சொல்ல வேண்டும். இதனால் பாபங்கள் குறையும். புண்ணியங்கள் விருத்தியாகும். இதை ஜபித்த பிறகு ஆராதனையிலும் - உபாஸனையிலும் திடமாக ஈடுபடலாம். சாப உத்தார மந்த்ரம் சாஸ்திரத்தில் இவ்வாறு கூறப்பட்டிருக்கிறது.

## மந்த்ரம்

"ஓம் ஹ்ரீம் வடுக சாபம் விமோசய விமோசய
ஹ்ரீம் க்லீம் ஸ்வாஹா"

என்ற இம்மந்திரத்தின் ஜபத்தை மானஸீகமாகச் செய்யவேண்டும். காரணம் இதுதான். அதாவது ஆலயங்களில் சேர்ந்து செய்யும் பூஜைக்குப் பிறகு பஜனைகளும் - ஸ்தோத்ரங்களும் - அனைவரும் சேர்ந்து சொல்வார்கள். அப்போது உபாஸகன் - ஸாதகன் பைரவ தேவனின் ஏதாவது ஒரு மந்திரத்தை 108 தடவை ஜபிக்க வேண்டும். அது சமயம் ந்யாஸமும் - த்யானமும் - ஆகிய செயல்முறைகள் இராது. உபாஸகரின் - ஸாதகரின் எண்ணம் பூராவும் பைரவனிடமே பூரணமாக ஈடுபட்டிருக்கும். அவர் தனது உள்ளக் கண்களால் பகவானை நேரில் கண்டு கொண்டிருப்பார். உடனே ஒரு மந்திரம் சொல்லத் தொடங்குவார். இப்படிச் சொல்லிக் கொண்டே இருக்கவேண்டும். ஒரே நிலையிலிருந்து த்யானமும் செய்து மறுபடி மறுபடி மந்திர ஜபத்தில் ஈடுபட்டால் அவரது கடமையை உணர்ந்து பைரவதேவர் கட்டாயம் பலனருள்வார்.

## ந்யாஸமும் - மந்த்ரஸித்தியும்

ஆராதனை - உபாஸனை - ஜபம் - த்யானம் என்ற வகைகளில் - ஒரு மந்திரத்தையோ - அல்லது பல மந்திரங்களையோ ஜபிப்பது பொது விதி. ஆனால் நமக்குச் சிறந்த பலனைப் பெற வேண்டுமானால் - பைரவதேவனின் தரிசனம் சீக்கிரம் கிடைக்க வேண்டுமானால் - அவரது விசேஷ அருளைப் பெற வேண்டுமானால் - பெரும் ஸித்தியை அடைய வேண்டுமானால் - நல்ல சக்திகளையும் பெற வேண்டுமானால் - லக்ஷக்கணக்கில் மந்த்ர ஜபம் செய்வது நல்லது. அதில் 10-ல் ஒரு பங்கு ஹோமம் செய்வதும் அவசியமாகும். இங்குச் சொல்லப்பட்டபடி பூர்ண ஆராதனையையும் - தாந்திரீக முறை

ஸாதனையையும் விதிமுறை பிசகாமல் செய்ய வேண்டும். மந்திர ஜபத்திற்கு முன்னால் பூதசுத்தி பைரவ தேவத்யானம் முதலியவைகளும் செய்ய வேண்டும்.

இம் மந்த்ர ஸாதனையைத் தந்திர சாஸ்திரத்தை அனுசரித்து - யந்திரத்தை நேரில் வைத்துக் கொண்டுதான் செய்ய வேண்டும். மந்திர ஜபம் செய்யும்போது பைரவ தேவனின் த்யானமோ - அழைப்பையோ செய்வதற்கு முன்னம் சில நியாஸங்களையும் செய்ய வேண்டும்.

## எட்டு இதழ் பைரவ பூஜன யந்த்ரம்



முதலில் 8 திசைகளிலும் தனித்தனி மந்திரம் சொல்லி நியாஸம் வைக்க வேண்டும். (மலர் தூவவும்)

### மந்த்ரம்

1. ஓம் தர்மாய நம : । அக்னி மூலையில்
2. ஓம் ஜ்ஞானாய நம : । நிருருதி திசையில்

3. ஓம் வைராக்யாய நம : । வாயு மூலையில்

4. ஓம் ஐச்வர்யாய நம : । ஈசான மூலையில்

5. ஓம் அதர்மாய நம : । கிழக்கில்

6. ஓம் அஜ்ஞானாய நம : । மேற்கில்

7. ஓம் அவைராக்யாய நம : । வடக்கில்

8. ஓம் அநைச்வராய நம : । தெற்கில்

## ருஷிந்யாஸம்

### மந்த்ரம்

1. ஓம் ப்ருஹதாரண்யகருஷயே நம : சிரஸி । (தலை தொடவும்)

2. ஓம் காயத்ரீ ச்சந்தஸே நம : । முகே । (முகத்தில் தொடவும்)

3. ஓம் வடுக பைரவாய தேவதாயை நம : । ஹ்ருதி (இதயத்தில் தொடவும்)

## மூர்த்தி ந்யாஸம்

### மந்த்ரம்

1. ஓம் ஹ்ரோம் வோம் ஈசானாய அங்குஷ்ட்டாப்யாம் நம:। (கட்டைவிரலைத் தொடவும்)

2. ஓம் ஹ்ரேம் வேம் தத்புருஷாய தர்ஜன்யோ : நம: । (ஆள்காட்டி விரலைத் தொடவும்)

3. ஓம் ஹ்ரூம் வூம் அகோராய மத்யமயோ : நம : । (நடுவிரலைத் தொடவும்)

4. ஓம் ஹ்ரீம் வீம் வாம தேவாய அநாமிகயோ : நம : । (மோதிர விரலைத் தொடவும்)

5. ஓம் ஹ்ராம் வாம் ஸத்யோஜாதாய கனிஷ்ட்டிகயோ : நம:। (சுண்டுவிரலைத் தொடவும்)

## சரீரந்யாஸம்

### மந்த்ரம்

1. ஓம் ஹ்ரோம் வோம் ஈசானாய நம: । (கட்டை விரலால் தலையைத் தொடவும்)

2. ஓம் ஹ்ரைம் வேம் தத்புருஷாய நம: । (ஆள்காட்டி விரலால் முகத்தைத் தொடவும்)

3. ஓம் ஹ்ரூம் வூம் அகோராய நம : । (நடுவிரலால் இதயம் தொடவும்)

4. ஓம் ஹ்ரீம் வீம் வாம தேவாய நம : । (மோதிர விரலால் மர்மம் தொடவும்)

5. ஓம் ஹ்ராம் வாம் ஸத்யோஜாதாய நம : । (சுண்டுவிரலாலே பாதம் தொடவும்)

## கரந்யாஸம் (கைவைப்பு முறை)

1. ஓம் ஹ்ராம் அங்குஷ்ட்டாப்யாம் நம: । (கட்டைவிரலைத் தொடவும்)

2. ஓம் ஹ்ரீம் தர்ஜனீப்யாம் ஸ்வாஹா: । (ஆள்காட்டி விரலைத் தொடவும்)

3. ஓம் ஹ்ரூம் மத்யமாப்யாம் வஷட் । (நடுவிரலைத் தொடவும்)

4. ஓம் ஹ்ரைம் அநாமிகாப்யாம் வௌஷட் । (மோதிர விரலைத் தொடவும்)

5. ஓம் ஹ்ரௌம் கனிஷ்ட்டிகாப்யாம் ஹூம் । (சுண்டு விரலைத் தொடவும்)

6. ஓம் ஹ்ரைம் : கரதலகரப்ருஷ்ட்டாப்யாம் ப்பட் ।

(இரு கைகளையும் சேர்த்துத் தட்டவும்)

## அங்கந்யாஸம் (உறுப்பு வைப்புமுறை)

### மந்த்ரம்

1. ஓம் ஹ்ராம் ஹ்ருதயாய நம : । (இதயம் தொடவும்)

2. ஓம் ஹ்ரீம் சிரஸே ஸ்வாஹா । (தலை தொடவும்)

3. ஓம் ஹ்ரூம் சிகாயை வஷட் । (சிகை தொடவும்)

4. ஓம் ஹ்ரைம் கவசாய ஹூம் । (உடலைத் தடவவும்)

5. ஓம் ஹ்ரௌம் நேத்ரத்ரயாய வௌஷட் । (கண்களைத் தொடவும்)

6. ஓம் ஹ்ர : அஸ்த்ராய ப்பட் । (தலை சுற்றிச் சுடக்கவும்)

இனி பைரவதேவனை த்யானம் செய்ய வேண்டும். முதலில் பைரவனைச் சாதாரணமாக த்யானம் செய்வர். பிறகு ஏதாவது ஒரு செயலை உத்தேசித்து ஸாதனையையோ - அனுஷ்ட்டானத்தையோ செய்யும் போது அதற்குத் தக்கவாறு ஸாத்விகம் - ராஜஸம் - தாமஸம் - என்ற முறையில் த்யானம் செய்யப்படுகிறது. தாந்த்ரீக முறைப்படி ஸாதனை செய்யும்போது - யந்த்ரம் ப்ரயோகம் செய்யப்படுகிறது. அப்போது பூரணமாகப் பூஜை - ப்ராண ப்ரதிஷ்ட்டை (உயிர் ஊட்டல்) வகை வகையான நியாஸங்கள் செய்யப்படும். இதைப் பற்றி தந்திர சாஸ்திரத்தில் விளக்கமாகச் சொல்லப்பட்டுள்ளது. இவற்றைத் தகுந்த குரு இல்லாமல் செய்வது சரியாகாது.

குரு கிடைக்காமையால் இந்தப் புத்தகத்தையே குல தெய்வ சந்திதியில் வைத்து வணங்கி வழிபட்டு உத்தரவு வாங்கிக் குருவாக மதித்துச் செய்யலாம் என்பது எமது கருத்து. வேறு வழியில்லாததால் தவறேதுமில்லை.

பூஜையோ - ஆராதனையோ - உபாஸனையோ - பொதுவாகச் செய்யப்படும் மந்திர ஜபமோ - ஸ்தோத்ரமோ மந்த்ரங்களின் நியாஸ முறைகளின் விதிவழுவாமல் செய்யலாம் என்பது ஒருமுறை. இருப்பினும் சாஸ்திரமுறைப்படிச் செய்வது என்பது மிகவும் முக்கியமாகும்.

மந்த்ரஸாதனை நிறைவு பெற்றது

ஓம் சாந்தி : ஓம் சாந்தி : ஓம் சாந்தி :

॥ ஓம் ॥



ஸ்ரீ :

# ஸ்ரீ பைரவர் மந்த்ர யந்த்ர தந்த்ரம்

தந்த்ர ஸாதனை செய்வதோ தந்த்ர சாஸ்த்ரமோ பழங்காலத்தில் மறைவாக வைக்கக் கூடியதாகவும் கஷ்டமானதாகவும் இருந்தது. இதே காரணங் கருதிப் படியாதவர்களும் - அறிவு குறைவானவர்களும் மட்டும் அல்ல படித்த ஜ்ஞானவான்களும் கூட - ஏன் தர்ம வழியில் அறச் செயலில் ஈடுபட்டவர்களும் இதைச் செய்யக் - கையாளத் தயங்கினார்கள். தந்த்ரம் என்ற பெயரைக் கேட்டதுமே கதிகலங்கினர் பலர். ஏனெனில் இது மற்றவரைப் பாதிக்கக்கூடிய அளவிற்கு இருக்குமோ என்ற பயமே அவர்களிடம் குடிகொண்டிருந்தது. ஆனால்

உண்மையில் பார்க்கப்போனால் இந்தத் தந்த்ரஸாதனை - அதாவது யந்த்ரத்தை முன்னால் வைத்து - மந்த்ரங்களை ஜபிப்பதோ - மந்த்ரங்களால் - ஹோமம் செய்வதோ நமது நன்மைக்காக - நமது வலிமைக்காகச் செய்வதேயாகும். இதனைக் கொண்டு ஸ்ரீ பைரவ தேவரின் அருளை விரைவில் பெறக்கூடிய வழியாகச் சொல்லப் பட்டிருக்கிறது. இதுவே எளிய வழியாகும். இது அசாதாரணமான சக்தியைப் பெறுவதற்கும் மற்றவற்றை விட மிக எளிதானதும் பிரபலமானதும் கூட எனலாம். இதனை ஒரு ஸாதகன் வெற்றிகரமாகச் செய்துமுடித்தால் தேவனாகவும் ஆகமுடியும். இருப்பினும் இந்தத் தந்தரஸாதனையைச் செய்யும்போது நல்ல கவனமும் - எச்சரிக்கையும் - கடமை தவறாமையும் - மனச்சஞ்சல மாகாமையும் துணிவும் - தைரியமும் பரிபூரணமான விதிமுறைகளைச் செய்யக்கூடியவர்களாகவும் இருத்தல் வேண்டும். அறியாமையால் எதையும் மறக்கக்கூடாது. அப்படிச் செய்ய மறந்தாலோ - தவறினாலோ ஏதாவது கஷ்டங்கள் வரலாம் என்பதால் கவனம் மிகவும் தேவை எனப்படுகிறது.

## ஜபமும் ஸித்தியும்

பழங்காலத்தில் முனிவர் - யோகியர் பலரும் - சாஸ்திர நிபுணர்களும் பகவானின் பல அவதாரங்களையும் - தேவ - தேவியரின் பல வடிவங்களையும் கண்டு பூஜைகளையும் - ஆராதனை முறைகளையும் - உபாஸனை வழிகளையும் - ஜபதபாதிகளையும் கொண்டு இவற்றிற்கு நிகரான மந்திர - யந்திர - தந்த்ரங்களின் மூலமாகப் போதுமான அளவு பல நூல்களைப் படைத்திருக்கிறார்கள். எனவே அவற்றின்படி ஒவ்வொரு தேவி - தேவதைகளை வைத்து - ஜபதபாதிகளையும் - ஆராதனை - உபாஸனைகளையும்

- செய்வது தவிர்க்க முடியாததாகிறது.

மந்திரங்களிலே தேவதைகள் தங்கி வாழ்கிறார்கள். எனவே மந்திரங்களைப் போற்றித் துதிப்பதாலும் - ஜபிப்பதாலும் - அதன் மகிமையால் கவரப்பட்டு - இழுக்கப்பட்டு அதன் மூலமாக ஆராதனை செய்யப் படும் தெய்வ எதிரிலே தோன்றுவர் என்கின்றன தர்ம சாஸ்திரங்கள். எனவே அவரவர் தங்களுக்குப் பிடித்த தெய்வத்தை மந்திரம் சொல்லி ஆராதனை - ஜபம் - உபாஸனை செய்யலாம். ஆராதகரும் - உபாஸகரும் - ஸாதகரும்.

இப்படி மந்திரத்தைச் சொல்லி நாம் ஜபம் முதலானவை செய்வதால் - அதன் மூலம் நமக்குச் சக்தி அதிகரிக்கும். இதனால் சம்பந்தப்பட்ட தேவி - தேவதைகள் யந்திரத்தின் எதிரே தோன்றுவதாகச் சாஸ்திரங்கள் கூறுகின்றன.

அதாவது பைரவதேவரையோ - அல்லது மற்ற தேவதைகளையோ - யந்திரத்தின் எதிரே வைத்துக் - குறிப்பிட்ட அளவு எண்ணிக்கையில் - நியமத்தோடு ஜபித்து வந்தால் - அந்த ஜப ஸாதனையே மந்திர ஸித்தி எனப்படுகிறது.

## ஸாதனையும் - ஸித்தியும்

தேவதைகளுக்குரிய அடையாளமாக இருப்பதுவே மந்த்ரம். இது ஸூக்ஷ்ம சரீரத்தை அழைக்கக் கூடியதொரு கருவி எனப்படும் யந்த்ரம் என்பது உருவத்தை வெளிக்காட்டக்கூடிய நிலையில் உள்ள தேவதைகளின் ஸ்த்தூல (பெரிய) வடிவைக் காட்டுவதற்குரிய அடையாளமாகும். அவர்களின் சக்திக்கு ஆதாரமாக இருப்பது.

ஒவ்வொரு தேவதையின் யந்த்ரத்திற்கும் ரேகைகள் குறிப்பிட்ட அளவில் வடிவமும் அமைந்திருக்கும். அவற்றின் நடுவே சில அக்ஷரங்கள் எழுதப்பட்டிருக்கும். அதாவது சொல். ஒவ்வொரு ரேகை (கோடு)யும் ஏதாவது ஒரு க்ரஹம் - நக்ஷத்ரம் - அல்லது ஸூர்யனின் சிறப்பு நிலை இவற்றின் அடையாளமாக இருக்கும். இதுவே பிரபல சக்தி உண்டாவதற்குக் காரணமாக அமைகிறது. ஒரு யந்திரத்தில் எழுதப்பட்ட எழுத்தோ - சப்தமோ - அந்தந்த குறிப்பிட்ட தேவதையின் அடையாளமாக இருப்பதால் அதற்குச் சிறப்பு வர்ணம் உண்டு. அது - அந்த ரேகைகளுக்கு அதிக சக்தியை வளர்க்கிறது. எனவே யந்த்ரத்தை நம் எதிரில் வைத்துக் கொண்டு ஜபம் செய்தால் அதன் மகிமையும் பன்மடங்கு அதிகரிக்கிறது. இவ்வாறு செய்து தேவதைகளை மகிழ்விக்க வேண்டும். ஆனால் பொதுவான ஆராதனை உபாஸனையாவும் நமது லக்ஷ்யமாக இருப்பின் அது மந்த்ர ஸாதனையாகும். இதுவே மாறி யந்த்ரத்தைப் பூஜை செய்யத் தலைப்பட்டால் யந்த்ர பூஜையைச் செய்தால் அது யந்த்ர ஸாதனை - யந்திர ஸித்தி எனப்படும். இந்த யந்த்ரங்களை ஒரு பூர்ஜபத்ரத்திலோ - தாமிர - வெள்ளி - தங்கத் தகட்டிலோ எட்டு வகை வாஸனைப் பொருள்களைக் கொண்டு வரைய வேண்டும். யந்த்ரம் முன்னமேயே காட்டப்பட்டுள்ளது. இப்படியாக வரைந்து கொண்டு பூஜையையும் - உபாஸனையையும் செய்தால் ஸாதகருக்கு நிச்சயம் பலன்கள் ஸித்திக்கும் என்கிறது தந்த்ர சாஸ்திரம்.

### உயிரூட்டல் (ப்ராண ப்ரதிஷ்டை)

மந்த்ரத்தை யந்திரத்தில் எழுதிவிட்டால் போதாது. ஆராதனை - உபாஸனைக்குச் சமமாக யந்த்ர ஸித்தி பெற

